# கோடகநல்லூர்
# சுந்தர சுவாமிகள் வரலாறு





6215

கோடகநல்லூர்

# சுந்தர சுவாமிகள்

வரலாறு

ஆசிரியர்
ஏ.வி.சுப்பிரமணிய அய்யர்




பாரி நிலையம்
90, பிராட்வே-சென்னை-600108

முதற் பதிப்பு : 2008

## நூல் பற்றிய விவரங்கள்

| | | |
|---|---|---|
| நூற்பெயர் | : | சுந்தர சுவாமிகள் வரலாறு |
| உரையாசிரியர் | : | ஏ.வி.சுப்பிரமணிய அய்யர் |
| தாள் | : | வெள்ளைத்தாள் 11.6 கி.கி. |
| பதிப்புரிமை | : | பாரிநிலையம் |
| நூலின் அளவு | : | கிரௌன் |
| பக்கங்கள் | : | 128 |
| வெளியிடுவோர் | : | பாரி நிலையம்<br>90, பிராட்வே, சென்னை-108.<br>போன்: 25270795 |
| பொருள் | : | வரலாறு |
| விலை | : | ரூ. 40.00 |
| கணினி அச்சு | : | சிவா கிராபிக்ஸ், சென்னை-94.<br>போன்: 9884712091 |
| அச்சிட்டோர் | : | மோனார்க் கிராபிக்ஸ்<br>சூளைமேடு, சென்னை-94.<br>போன். 23621086 |

62/5

# முன்னுரை

கடந்த நூற்றாண்டின் தமிழ்நாட்டில் தோன்றிய மகான்களில் கோட நல்லூர் சுந்தர சுவாமிகளும் ஒருவர். அவருடைய வாழ்க்கையைப் பற்றிய செய்தி களை, துல்லியமாய், கால நிர்ணயத்துடன் தெரிய முடியவில்லை. அவர் எழுதியதாகக் கடிதங்களோ, அவருடைய சுற்றுப்பிராயணங்கள், சொற் பொழிவுகள் ஆகியவற்றைப் பற்றி அக்காலத்துப் பத்திரிகைச் செய்திகளோ அறிக்கைகளோ கிடைக்கவில்லை. அவருடைய ஏராளமான சீடர்கள் வாய்மொழியாய்ப் பரப்பியதின் மூலம்தான் மக்களுக்கு சுவாமிகளின் வாழ்க்கை விபரங்களை ஓரளவு தெரியமுடிந்தது!

இதன் அடிப்படையில், இந்த நூற்றாண்டில் சுந்தர சுவாமிகளின் வாழ்க்கையைப் பற்றி, சில சிறு நூல்கள் வெளி வந்திருக்கின்றன. அவற்றில், வாய்மொழியாய் மக்களிடம் பரவி வந்த விபரங்கள் அநேகமாக ஒரே மாதிரியாகவே கூறப்பெற்றிருக்கின்றன. அவர் செய்த தாகக் கருதப்பெற்ற பல் அபூத அற்புதச் செயல்களும் அவ்வாறே ஒரே மாதிரியாகக் கொடுக்கப்பட்டிருக் கின்றன. சமீபத்தில் 1969-ல் சுவாமி ராமானந்த பாரதி (பூர்வாஸ்ரமத்தில் கே.ஆர்.ஆர். சாஸ்திரி, வழக் குரைஞர்) ஆங்கிலத்தில் ஒரு நூலை எழுதினார். அதன் தமிழாக்கம் சென்ற வருடம் வெளி வந்தது. இவரும் முன் நூல்களையே பின்பற்றி எழுதியிருக்கிறார். நூல் சிறியதாய் இருந்தபோதிலும், அதில் சில புதிய விஷயங்களும் விளக்கங்களும் காணப்பெறுகின்றன.

இந்த நூலிலும் சுந்தரசுவாமிகளின் வாழ்க்கையைப் பற்றிய செய்திகளும் அற்புதச் செயல்களும் முந்திய நூல்களில் உள்ளவாறே வரையப்பெற்றிருக்கின்றன. ஏனென்றால், வாழ்க்கைக் குறிப்புகள் சரித்திர ரீதியாகச் சரியாயிருக் கின்றனவா அல்லது அவர் நிகழ்த்தியதாகச் சொல்லப்படும் அற்புதங்கள் எல்லாம் உண்மையாய் நடைபெற்றனவா என்று ஆராய்வதற்கும் போதுமான ஆதாரங்கள் இல்லை. இந்த நூலின் நோக்கத்திற்கும் இன்றியமையாயதது அல்ல, இவ்வித ஆராய்ச்சி.

பொதுவாக, சமயத்துறையிலும் ஆன்மீகத்துறை யிலும் தொன்றுதொட்டுப் பெரியோர்கள், பல அபூத அற்புதச் செயல்களை நிகழ்த்தியதாகவே நாம் போற்றி வரும் நூல்கள் கூறியிருக்கின்றன. (இங்கு நாம் புராணக் கதைகளைக் குறிப்பிடவில்லை.) அதேபோல்தான் சுந்தரசுவாமிகள் வாழ்க்கையில் அவர் செய்ய நேர்ந்த அற்புதங்களை அவருடைய சீடர்கள் பார்த்திருப்பார்கள்; மக்களும் தெரிந் திருப்பார்கள் - ஒன்றுமே நடவா திருக்கும் போது அவர்கள் இது போன்ற அற்புதங்களை, சுவாமிகள் செய்ததாகக் கற்பனை செய்து சிருஷ்டித் திருக்கக்கூடிய கட்டுக் கதைகள் என்று நினைப்பது தவறு. ராமலிங்க சுவாமியின் வாழ்க்கையைக் கூறும் நூல்கள் அவர் நிகழ்த்திய அற்புதங்களைச் செப்பு கின்றன. ஷிர்டி சாய் பாபா அவர்கள் சரித்திரத்தில் அவர் ஆற்றிய அபூதச் செயல்களை நூலை எழுதிய நரசிம்ம சுவாமிகள் வரிசையாகக் கூறிவிட்டு, பாபா, மூன்று நாட்கள் தமது உடலை விட்டு வேறு உடலுக்குப் போய் (பரகாயம்) மீண்டும் தமது உடலுக்கு வந்ததாகச் சொல்லியிருக்கிறார். இன்று நமது கண்முன்னால் வாழும் ஸ்ரீ சத்திய சாய் பாபா சுவாமிகளின் வாழ்க்கையைப்பற்றியும் அவர் செய்து வரும் அபூத

அற்புதச் செயல்களைப்பற்றியும் பல புத்தகங்கள் வெளி வந்திருக்கின்றன. இவற்றில் சில வெள்ளைக்காரர் களால் எழுதப்பெற்றிருக்கின்றன. பிரபல ஆங்கிலேயப் பிரசுரக் கம்பெனிகள் சிலவற்றை வெளியிட்டிருக் கின்றன. ஆகையால், சுந்தர சுவாமி களின் அற்புதச் செயல்களை செவி வழி வந்தவாறு எழுதப்பெற வேண்டியது இயற்கையே; நியாயமும் கூடத்தான்.

சுந்தர சுவாமிகளின் வாழ்க்கை விபரங்களை இயன்ற அளவு தொடர்புபடுத்தி அம் மகானுடைய சேவையின் தத்துவத்தையும் சாதனையையும் முறையாக விளக்க முயன்றிருக்கிறேன். இந்த இயல்பில்தான் இந்த நூல், முந்திய புத்தகங்களினின்றும் வேறுபட்டிருக்கின்றது. இதற்குத் துணை புரியுமாறு கடந்த நூற்றாண்டில் தமிழ் நாட்டில் நிலவிய சமய நிலையை முதல் அத்தியாயத் தில் வரைந்திருக்கிறேன். சுந்தர சுவாமிகளின் வேதாந்த நூல்களிலிருந்து சில பகுதிகள் ஒரு அத்தியாயத்தில் தனியாகக் கொடுக்கப்பட்டிருக்கின்றன. அவருடைய வாழ்க்கையையும் சேவையையும் சரியாய்த் தெரிந்து கொள்வதற்கு அவசியமான குறிப்புகள் அநுபந்தங் களில் அமைந்திருக்கின்றன.

இந்த நூல்,பொதுவாக தமிழ்நாட்டின் சமய வாழ்வைத் தெரிய விரும்புகிறவர்களுக்கும், சிறப்பாக சைவ நன் மக்களுக்கும் பயனுள்ளதாயிருக்கும் என்று நம்புகிறேன். ஏனென்றால், மொத்தத்தில் நூலை ஆராய்ச்சிக் கண்ணோட்டத்துடன் எழுத முயன்றிருக் கிறேன்.

சுந்தரசுவாமிகள் நெல்லையைச் சேர்ந்த கங்கை கொண்டானில் பிறந்து, பத்தமடையில் வளர்ந்து, கோடக நல்லூரில் ஞானவொளி பெற்று, புதுக் கோட்டையைச் சேர்ந்த அரிமளத்தில் சித்தியடைந்தார்.

அங்கே, அப்பெரியாருடைய அரிஷ்டானத்தில், ஒரு சிவாலயம் கட்டப்பெற்று இயங்கி வருகிறது. அவ்வூரைச் சேர்ந்த, பாரி நிலையத்தார் இந்நூலைப் பிரசுரிக்க முன் வந்திருப்பது மிகவும் பொருத்தமானது மன்றிப் பாராட்டுதலுக்கும் உரியதாகும்.

**ஏ.வி.சுப்பிரமணிய அய்யர்**



அரிமளம் சுந்தர சுவாமிகள் அரிஷ்டானம் கோயில்

# பொருளடக்கம்



கோடக நல்லூர் சுந்தர சுவாமிகள்

# 1

# பத்தொன்பதாம் நூற்றாண்டில் தமிழ் நாட்டின் சமய நிலைமை

தமிழ் நாட்டில் கடந்த நூற்றாண்டில் நிலவிய சமய நிலைமையைச் சுருக்கமாக ஆராய்வது இந்த அத்தியாயத்தின் நோக்கம். மக்களில் மிகப் பெரும்பாலோர் (சுமார் 85 சதவிகிதம்) இந்துக்கள்; அதாவது இந்து சமயத்தைச் சேர்ந்தவர்கள். இந்து சமயத்தின் அக்கால நிலைமையைத் தெரிந்துகொள்ள அதன் பிரிவுகளைப்பற்றியும் சொல்ல வேண்டும். அதன் இரண்டு பெரிய பகுதிகள் சைவமும் வைணவமும். பிற்காலச் சமயக்கணக்கர்களில் ஒரு சாரார் இவற்றை வெவ்வேறு சமயங்கள் என்று கருதியிருந்த போதிலும், இரண்டும் வேதங்களின் அடிப்படையில் தோன்றி, அவரவர்களின் பரம்பொருளைப்பற்றி ரூபநாம வேறுபாடுகளையே கொண்ட வைதிகத் தோழமைச் சமயங்கள் என்பதுதான் நமது முன்னோர்களுடைய பொது வான கொள்கை. புராணங்களையும் பிற சமயநூல்களையும் பரந்த நோக்கத்துடன் படித்துத் தெளிந்தால் இந்த உண்மை விளங்கும். தந்திரசாத்திரங்களில் காணப்பெறும் சில வழிபாட்டு முறைகளைத் தனிநபர்கள் ஆங்காங்கே கைக்கொண்டிருந்த போதிலும், சாக்தத்தின் தனி சமயவியாபகம் மறைந்து, பரம சிவனின் 'உமையொருபாக' தத்துவத்துடன் இணைந்து விட்டது. 'சிவனின்றிச் சக்தி

இல்லை, சக்தி இன்றிச் சிவன் இல்லை' என்பது இந்தத் தத்துவத்தின் சாரம்.

இந்துக்களில் சுமார் நாற்பது சதவிகிதத்திற்கு மேலாக இருந்தவர்களும், அக்காலத்தில் சமுதாயத்தின் அடி மட்டத்தில் இருந்ததாகக் கருதப்பெற்றவர்களுமான அரிசனங்கள், முக்குலத்தோர்கள் முதலிய வகுப்பினர்கள், பல பெயர்களிலுள்ள அம்மன்கள், கிராமதேவதைகள் ஆகிய 'சிறு தெய்வங்'களின்[1] 'வழிபாடுகளிலேயே பெரும்பாலும் ஈடுபட்டிருந்தார்கள். அத்துடன் அவர்கள் விநாயகர், முருகன், சிவன், விஷ்ணு ஆகிய தெய்வங்களையும் வணங்கி, அத் தெய்வங்களின் ஆலயங்களில் அவ்வப்போது நடைபெற்ற திருவிழாக்களில் தங்களுக்குரிய அளவில் கலந்து கொண்டும் வாழ்ந்ததால் இந்துக்களாகவே கருதப்பெற்று கணக்குக் கொடுக்கப்பட்டார்கள்.[2]

1. "சென்று நாம் சிறு தெய்வம் சேர்வோம் அல்லோம்" - அப்பர். "நலிதரு சிறிய தெய்வமென்றையோ நாட்டில் பல பெயர் நாட்டி" - ராமலிங்க சுவாமிகள்.

2. இதற்கு வேறொரு காரணமும் உண்டு. இவ்வாறு 'சிறு தெய்வங்கள்' என்று லட்சக்கணக்கான மக்கள் வணங்கும் கடவுளர்கள் கூறப் பெற்றாலும், அத் தெய்வங்களின் வணக்கம் தங்கள் தங்கள் பரம் பொருளுக்கே போயச் சேரும் என்றும், அப் பரம்பொருள் அவர்களுக்கும் கருணை காட்டி அருள்பாலிக்கும் என்றும் ஒரு தத்துவத்தைச் சைவ வைணவ சமயிகள் கொண்டிருந்தார்கள்.

"நூலறிவு பேசி நுழைவிலாதார் திரிக,
நீல மணிமிடற்றான் நீர்மையே - மேலுலந்த
தெக் கோலத் தெவ்வுருவாய் எத்தவங்கள் செய்வார்க்கும்,
அக்கோலத் தவ்வுருவே ஆம்" - காரைக்கால் அம்மையார்.

எனினும், அவர்களில் ஒரு பகுதியினர், சமூகத்தில் அவர்களுக்கு இருந்த தாழ்ந்த நிலை இடையூறுகள் முதலியவற்றின் காரணமாக, கிறித்துவமதத்தைத் தழுவினார்கள். நாடு ஆங்கிலேயரின் ஆட்சியில் இருந்தது இதற்குத் துணை செய்தது, ஆங்கிலேயர் தமிழ் நாட்டின் ஆட்சியைக் கைப்பற்று முன்பு, அது சிற்சில காலங்களில் முஸ்லிம் நவாபுகள் வசம் இருந்தது. இந்த நவாபு களிடமிருந்தே பிரிட்டிஷார், தாங்கள் கொடுத்த கடன்களை வசூலிப்பதற்காகவும், அவர்களுடைய ராணுவச் செலவுகளுக்குப் பணம் கொடுப்பதற்காகவும், தமிழ் நாட்டின் ஆட்சியை உடன்படிக்கையின் மூலம் முதலில் எடுத்துக் கொண்டு, பின்னர் ஆட்சி உரிமை முழுவதும் தங்களுடையதே என்று பறைசாற்றினார்கள். மக்களும் கொடுங்கோன்மையிலிருந்து விடுதலை கிடைத்தது என்று கருதி, இதை ஏற்றுக் கொண்டு ஆட்சியாளர்களுடன் ஒத்துழைத்தார்கள். நவாபுகளின் ஆட்சிக் காலத்தில் மக்களில் சிலர் முஸ்லிம் மதத்தைத் தாமாகவோ, ஆட்சியாளர்களின் நிர்பந்தத்தினாலோ தழுவியிருந்தார்கள். கிறித்தவர்களும் முஸ்லிம்களும் கணிசமான அளவில் இருந்த போதிலும், மொத்தம் சுமார் பதினைந்து சதவிகிதத்திற்கும் குறைவாகவே தான் இருந்ததாகத் தெரிகிறது. இவ் இருசமயங்களைச் சேர்ந்தவர்களும், கடவுளைத் துதிப்பதிலும், வழிபாட்டு முறைகளிலும் தத்தம் சமய முறைகளையே கைக்கொண்ட

-ஔவாதே

"எவ்வுருவில் யாரொருவர் உள்குவார் உள்ளத்துள்
அவ்வுருவாய்த் தோன்றி அருள்கொடுப்பான் - எவ்வுருவும்
தானேயாய் நின்றளிப்பான்." –சேரமான் பெருமாள் நாயனார்

"நும்மின் கவிகொண்டு நும்நும்
இட்டதெய்வம் ஏத்தினால்
செம்மின் சுடர் - முடிஎன்
திருமாலுக்குச் சேருமே - நம்மாழ்வார்.

போதிலும், காலர்சாரத்தில், தாங்கள் முன்னர் சேர்ந்திருந்த இந்து சமுதாயத்தின் பழக்க வழக்கங்கள் சிலவற்றையும் பின்பற்றி வந்தார்கள். முஸ்லிம்களில் பலர், சாதகங்கள் எழுதுதல், ராகுகாலம் சகுணங்கள் முதலியவை பார்த்தல் போன்ற வழக்கங்களைக் கைவிடவில்லை. இன்றும் இந்த நிலைமையில் மாறுதல் ஏற்படவில்லை.[1] கிறித்தவர்களில் சிலர், குடுமிவைத்தல் வேஷ்டி உடுத்தல், உணவு போன்ற விஷயங்களில் தங்கள் சாதி வழக்கங்களைக் கைவிட மறுத்தே அம்மதத்தில் சேர்ந்தார்கள். கடந்த நூற்றாண்டின் மத்தியில் நெல்லை மாவட்டத்தில் உயர்ந்த வகுப்புகளைச் சேர்ந்த சில அறிவியல் மேதைகள் இவ்வாறு மறுத்தவர்கள். உள்ளூர் பாதிரிகள், அவர்களைத் தங்கள் குடுமிகளை எடுத்துவிட்டு, நடை, உடை, பாவனைகளை மாற்றிக் கொள்ளாவிட்டால் கிறித்து மதத்தில் சேர்க்கவோ ஞானஸ்நாநம் கொடுக்கவோ மறுத்தார்கள். ஏசுநாதரின் வாழ்க்கையிலும் போதனைகளிலும் ஈடுபட்டுந் தாமாகவே வலியவந்து அவருடைய மதத்தைத் தழுவ அவாக் கொண்ட வாலிபர்கள் இந்த விஷயத்தில் ஒரு போராட்டத்தையே நடத்தத் தீர்மானித்து, மேல் மட்டத்திலுள்ள கிறித்துவ அதிகாரிகளை அணுகித் தங்கள் கட்சியை எடுத்துக் கூறவே, அவர்கள் இதன் நியாயத்தை உணர்ந்து அவர்களைக் கிறித்துவ மதத்தில் சேர்த்துக் கொள்ள அனுமதி கொடுத்தார்கள். இந்த வாலிபர்கள் வெளித்தோற்றத்திலும்,

---

"In those days there was a regular crusade against the kudumi in Christian circles, as it was regarded as a proof and emblem of caste pride, and thought to be a connecting link kept up with Hinduism. Bishop Sargent would not baptise anv Hindu convert unless he had removed his kudumi."

நடை, உடை, பாவனை, உணவு முதலியவைகளிலும் பிற இந்துக்கள்போல் வாழ்ந்து கிறிஸ்தவர்களாயிருக்கும் உரிமைக்குப் போராடி வெற்றி பெற்றிருந்தது. இன்று நமது நாட்டில் கிறித்துவ மதம் இந்திய மயமாக்கப்பட்டிருப்பதற்கு ஒரு முன்னோடிச் செயல் என்பது குறிப்பிடத்தக்கது.[1] கிறித்து, முஸ்லீம் சமயம் ஒவ்வொன்றிலும் இரண்டு பெரிய பிரிவுகளும் எத்தனையோ உட்பிரிவுகளும் இருந்திருக் கின்றன. அவற்றிற்கு, இந்த நூலில் குறிப்பிட்டு விளக்கம் பெறும் அளவுக்கு முக்கியத்துவமோ, அல்லது அதன் நோக்கத்திற்குப் பொருத்தமோ இல்லை.

சைவமும் வைணவமும் இந்துசமயத்தின் பெரிய பிரிவுகளாய் இருந்துவருவதை மேலே குறிப்பிட்டிருக்கி றோம். இவற்றைச் சேர்ந்தவர்களின் ஜனத்தொகைக் கணக்கு தனியாக எடுக்கப் பெறாததால், இந்துக்களில் எத்தனை சதவிகிதம் சைவர்களும் வைணவர்களும் இருந்தார்கள் என்பதைத் துல்லியமாகச் சொல்ல முடியாது. பெரும்பாலோர்

---

"They (Dr.W.E.Dhanakoti Raju and two others) refused to be baptised until the missionaries gave up their pet theories and foolish practices with regard to the wearing of the kudumi and as to how christains should eat, drink and dress." - Fifty years' Pilgrimage of a convert - A.S.Appaswami. Pages.8 and 140.

"One cannot forget that most south Indian Muslims were Hindus about ten or twelve generatains ago. We still have some Hindu customs and the native language. and in the case of certain sects even Hindu succession laws. Many of us believe in Astrology and in charging interest on loans, two features, a devout muslim abhors." Mohammed Ghouse. The Hindu, Madras. 1973 June 13, page 8.

சைவத்தைச் சேர்ந்திருந்தார்கள் என்று பொதுவாக மதிப்பிட்டால், அது தவறாகாது சைவத்தில் முன்னாட்களில் இருந்து பின்னர் வழக்கொழிந்த உட்பிரிவுகளை ஒதுக்கி விட்டால், கடந்த நூற்றாண்டில் நிலவிய பிரிவுகளில் முக்கியமானவை மூன்று. மெய்கண்ட சித்தாந்த சைவம், வீரசைவம், வேதாந்த சைவம் ஆகியவை தான் இம்மூன்று பிரிவுகள். இவற்றைச் சேர்ந்தவர்கள் பரம்பொருளாக வழிபடும் கடவுள் பரமசிவம். ஆனால், ஒவ்வொரு பிரிவைச் சேர்ந்த சில வழிபாட்டு முறைகளும் தரிசனக்கொள்கைகளும் வேறுபட்டிருந்தன. சைவத்தில் பெரும்பாலோர் மெய்கண்ட தேவர் வகுத்துக்காட்டிய சைவசித்தாந்த தத்துவத்தைப் பின்பற்றினார்கள் இவர்களுக்கு வட மொழியிலுள்ள வேதாகமங்கள், புராண இதிகாசங்கள், ஆகியவற்றில் அவர்களுக்குரிய பகுதிகளுடன், தேவாரம் திருவாசகம் முதலிய பன்னிரு திருமுறைகள் தெய்வீகம் பெற்ற பிராமண நூல்கள். வீரசைவர்கள் பசவதேவரின் சமய சமத்துவக் கொள்கைகளை ஏற்றுக் கொண்டவர்கள். இவை சித்தாந்த சைவர்களினின்றும் பல இயல்புகளில் வேறுபட்டவை. வீரசைவர்களில் பெரும்பாலோர் கன்னட தெலுங்கு நாடுகளில் வசித்துவந்தபோதிலும் சிலர் தமிழ்நாட்டிலும் வாழ்ந்தார்கள். வேதாந்த சைவர்கள் ஆதிசங்கரர் முழுமை யாக்கிய அத்துவித வேதாந்த தத்துவத்தில் ஈடுபட்டவர்கள்; சிவனைப் பரம்பொருளாகப் போற்றி வணங்கி வந்தவர்கள். இவர்களை, சைவர்கள் என்று சொல்வதை விட ஸ்மார்த்தர்கள் என்று கொள்வது பொருத்தமாயிருக்கும். என்று சிலர் கூறி வருவதற்கு, பேச்சு வழக்கின்றி, சமய மரபிலோ, சாத்திரங்களோ போதிய ஆதரவு இல்லை. வீரசைவர்களும், வேதாந்த சைவர்களும், சைவாகமங்

களையும், சைவசமயா காரியர்களின் அருள்வாக்கையும் பயின்று பாராட்டியும் வந்தார்கள்.

தமிழ்நாட்டில் வைணவத்தை உருவாக்கிப் பரப்பியவர்கள் ஆழ்வார்கள் அவர்களுக்குப் பின்வந்த ஆசாரியர்களும் ஆவார்கள். எல்லாத் தமிழ்நாட்டு வைணவர்களுக்கும், வேதாகமங்கள் புராண இதிகாசங்கள் ஆகியவற்றில் அவரவர்களுக்குரிய பகுதிகளுடன், ஆழ்வார்களின் அருளிச் செயல்களாகிய தமிழிலுள்ள திவ்வியப் பிரபந்தமும் ராமானுஜரின் வடமொழியிலுள்ள விசிஷ்டாத்வித தத்துவ பாஷ்யங்களும் விளக்கங்களும் சிறப்பான பிரமாண நூல்கள். இருந்தபோதிலும், வைணவத்தில், வடகலையார், தென்கலையார் என்ற இரண்டு பெரிய பிரிவுகள், சுமார் ஐந்து அல்லது ஆறு நூற்றாண்டுகளாக இயங்கிவந்து, இறுகி, இன்றுவரை நிலைத்திருக்கின்றன. வடகலையார் வேதாந்த தேசிகரின் கொள்கைகளையும் கருத்துக்களையும் பின்பற்று பவர்கள். பிள்ளை லோகாச்சாரியார் காலத்திலிருந்தே வேறு பாடுகள் வெளிப்பட்ட போதிலும், அவை பின்னரே வலுவடைந்தன. தென்கலையார், வைணவ ஆசாரிய பரம் பரையின் கடைசித் தலைவரான மணவாள மாமுனிகளின் கொள்கைகளையும் உபதேசங்களையும் ஆதரிப்பவர்கள். கடந்த நூற்றாண்டில் (அதற்குப் பின்னரும், இன்று வரையும் கூடத்தான்) சில பெரிய வைணவ கோவில்களின் நிர்வாகம், வழிபாட்டு முறைகள் ஆகியவற்றைப்பற்றி இரு பிரிவினரிடமும் பூசல்கள் தோன்றி, தாவாக்கள் அரசாங்க அதிகாரிகளின் நடவடிக்கைகளுக்கும், கோர்ட்டுகளின் தீர்ப்புகளுக்கும் எடுத்துச் செல்லப் பட்டிருக்கின்றன. இவ்விரு பிரிவுகளுக்குள், தத்துவக் கொள்கைகளிலும், சம்பிரதாயங்களிலும் சில வேறுபாடுகள் உண்டு. அவற்றை இங்கே வளர்க்கவேண்டிய அவசியமும் இல்லை.

சென்ற நூற்றாண்டின் முற்பாதி முதல், நாட்டை ஆண்ட ஆங்கிலேயர்கள் மக்களுக்கு ஆங்கிலமொழி கல்லூரி களையும் ஏற்படுத்தினார்கள். அரசாட்சியை நடத்துவதற்குக் கீழ்மட்ட உத்தியோகங்களுக்கு பயிற்சி பெற்றவர்களைத் தயார் செய்வது அவர்களுடைய முக்கிய நோக்கம், எனினும், வேறு விளைவுகளும் தோன்றின. இந்துக்களில் சிலர் மேனாட்டு விஞ்ஞான தத்துவ ஞான நூல்களைக் கற்றதின் பயனாக, தங்களுடைய சமயத்தின் வைதிகத்துறையைச் சார்ந்த கொள்கையிலும் வாழ்க்கைமுறைகளிலும் நம்பிக்கை இழந்து, சீர்திருத்தக் கருத்துக்களையும் இயக்கங்களையும் நாடினார்கள். வங்காளத்தில் ராம் மோகன் ராய், கேசவ சந்திர சேனர் போன்ற பெரியார்களின் தலைமையில் பிரம்ம சமாஜமும், மேற்கு இந்தியாவில் மகான் தயானந் சரஸ்வதியின் தலைமையில் ஆரிய சமாஜமும் தோன்றி, படித்த இந்துக்களின் ஆதரவுடன் ஓரளவு வலுப்பெற்றன. இவ்விரு இயக்கங்களைச் சேர்ந்தவர்கள் இந்து சமயத்திற்கு அடிப்படையான விக்கிரக ஆராதனையும் ஆலயவழிபாடும், இந்து சமயத்தின் அமைப்புடன் பிணைக்கப்பட்ட சாதி முறையும், வேதங்களில் அனுமதிக்கப்படவில்லை என்று வாதாடிச் செயல்பட்டார்கள். அத்துடன், சீர்திருத்த சமயப்பணியிலும் சமூகசேவையிலும் ஈடுபட்டார்கள். பிரம்ம சமாஜம், ஆரிய சமாஜம் போன்ற சீர்திருத்த ஸ்தாபனங்களுக்குத் தமிழ்நாட்டிலும் கிளைகள் இருந்தன. ஆனால், அவை மக்களின் ஆதரவு பெற்று வலிமையுடன் இயங்கினதாகத் தெரியவில்லை. இவற்றின் கொள்கைகளை ஏறக்குறைய ஏற்றுக்கொண்ட வேத சமாஜம் என்ற ஒரு ஸ்தாபனம் சென்னையில் சடகோபாச்சாரியார் போன்றவர் களின் தலைமையில் நடைபெற்றது. சமூக சீர்திருத்தவாதிகள் ஆங்காங்கே சங்கங்களை நிறுவிப் பிரச்சாரம் செய்து

கொண்டிருந்தார்கள். தமிழ் நாட்டு மக்கள் சென்ற நூற்றாண்டில் சமய, சமுதாயச் சீர்திருத்தக் குரலுக்குப் பெருமளவு செவிசாய்த்தாகக் கூறமுடியாது. இந்த நூற்றாண்டின் இறுதியில் சென்னையில் தொடங்கப்பெற்ற பிரம்மஞான சங்கமும், ராமகிருஷ்ணா மிஷனின் கிளையும் செய்த இந்து சமயப் பிரச்சாரமும் இதற்கு ஒரு காரணம்.

மக்களின் சமயவாழ்வு, பொதுவாக எவ்வாறு உருவெடுத்து இயங்கியது என்பது நுட்பமான ஆராய்ச்சிக் குரியது. ஆகமங்களின் அடிப்படையிலும் சில்ப சாத்திரங் களின் விதிகளின்படியும் கட்டப்பெற்று, பலநூற்றாண்டு களாக நாடெங்கும் கல்லில் இழைத்த கம்பீரக் காவியங்கள் என ஓங்கியிருக்கும் ஆயிரக்கணக்கான ஆலயங்கள், தமிழ்நாட்டின் இந்துசமயத்தின் தனிச்சிறப்பாக அமைந் திருந்தன. இவைகளில் வேத மந்திரங்களின் மூலம் பரம்பொருளை விக்கிரகங்களில் ரூப நாமங்களுடன் ஆவிர்ப்பவிக்கச் செய்தார்கள். இதன் தத்துவம் ஆழ்ந்த பொருளுடையது. கடவுள் ‘உள்குவார் உள்ளத்தில் உளன்’ எனவும், ‘சித்தம் அறியாதபடி சித்தத்தில் இயங்குகிறான்’ எனவும் சைவர்களும், ‘அந்தர்யாமியாய் ஒவ்வொரு சேதன்னிடத்திலும் விளங்குகிறான்’ என வைணவர்களும் கொண்ட போதிலும், இந்த உணர்வு உள்ளத் தூய்மையும் ஆன்ம ஞானப் பெற்றியும் படைத்த மிகமிகச் சிலருக்கே அநுபவ ரீதியாகக் கிட்டியிருக்கிறது. பலர் நூல் வழக்காக இந்தத் தத்துவத்தைப் பற்றிப் பேசிவந்த போதிலும், நடைமுறையில், ஆலயங்களின் விக்கிரக வழிபாடு மூலமே கடவுள் தத்துவம் சமுதாயத்தில் மக்களிடம் பரவியிருந்தது. சைவத்தின் மூர்த்தி நெறியாலும், வைணவத்தின் அச்சா வதாரக் கொள்கையாலும், ஆலயங்களில் வீற்றிருந்து அருள்பாலிக்கும் விக்கிரக மூர்த்திகளை முழுமையான

தெய்வீகமுடைய பரம்பொருளாகவே கருதினார்கள். ஒரே கடவுளுக்கு பல பெயர்களின் பல ஆலயங்கள் இருந்த போதிலும், ஒவ்வொரு ஆலய மூர்த்திக்கும் தனி சாந்நித்யமும், எல்லையற்ற அருள்சக்தியும் வாய்த்திருப்ப தாகவே கொண்டார்கள். இநதத் தத்துவத்தின் அடிப் படையில் தான் நாயன்மார்களும் ஆழ்வார்களும் நூற்றுக் கணக்கான கோவில்களுக்குச் சென்று அங்குள்ள தெய்வங் களை வணங்கி, தங்களுடைய பாசுரங்களைப் பாடினார்கள். ஆலயங்களின் அன்றாட பூசைகளிலும் வழிபாடுகளிலும், சிறப்புத் திருவிழாக்களிலும் மக்கள் ஈடுபட்டு உற்சாகத்துடன் கலந்து கொண்டார்கள். இந்து சமய ஆலயங்கள் வெறும் வழிபாட்டுக் கூடங்களாக மாத்திரம் இயங்கவில்லை. அவை சமுதாயத்தின் உயிர்நாடிகளாயும், கலைக்கூடங்களாயும், சமூகப் பாதுகாப்புக் கோட்டை களாயும் அமைந்திருந்தன. அத்துடன் இறைபணிக்குப் பயன்படுத்தப்பெற்ற இசை, நாட்டியம், ஓவியம், சிற்பம் முதலிய நுண்கலைகளின் கருவூலங்களாயும் திகழ்ந்தன.

ஆலயங்களுக்கு அடுத்தபடியாக மடங்கள் கடந்த சுமார் ஐநூறு ஆண்டுகளாக (பல அதற்கு முன்னரே இயங்கிவந்த போதிலும்) அதிகமான ஊக்கத்துடன் சமயத் துறையில் மக்களுக்கு வழிகாட்டிகளாயிருந்து, சமயப் பண்பாடுகளை வளர்த்தும், ஆலயங்களைப் பராமரித்தும்,சமய தத்துவஞான நூல்களைப் பாதுகாத்தும் வந்தன. இவை பெரும்பாலும் கல்வி அறிவும், ஆற்றலும், சமயத்தேர்ச்சியும், ஆன்மஞானத் தெளிவும் பெற்ற சந்நியாசிகளின் தலைமையில் நடை பெற்றன. ஆலயங்கள், மடங்கள் ஆகியவற்றின் மூலம், சமய வளர்ச்சியும் அறிவும் ஓரளவு பெற்ற மக்கள், தங்களுடைய குடும்ப வாழ்க்கையில், பல விரதங்கள், பண்டிகைகள் முதலியவற்றைக் கொண்டாடுவதன் மூலமும், முன்னோர்கள்

வகுத்த முறையில் திருமணம் முதலிய சடங்குகளையும், அமரக்கிரியைகள் சிராத்தம் முதலியவற்றையும் கட்டுப் பாட்டுடனும் நம்பிக்கையுடனும் நடத்துவதின் மூலமும், அவ்வுணர்ச்சியைப் பலப்படுத்திக் கொண்டார்கள். மனிதன் பிறந்து வளர்ந்து மறையும் வரையில், அவன் வாழ்வு முழுவதும் அவனுக்குத் தெரிந்தோ தெரியாமலோ சமய வலையில் கட்டுண்டிருந்தது என்று கூறினால் அது மிகையாகாது.

மேலே காட்டியபடி சமயங்கள் இயங்கி மக்களிடம் ஆட்சிபுரிந்த முறையில், நாட்டின் சூழ்நிலையாலும் மனித இயற்கையின் தாழ்ந்த இயல்புகளாலும், எத்தனையோ குறைபாடுகள் தோன்றின. கி.பி. பதினெட்டாம் நூற்றாண்டில் தமிழ்நாடு முழுவதிலும் போர்கள் அடிக்கடி நிகழ்ந்தன. இதன் விளைவாக அரசியல் குழப்பமும் பல பகுதிகளில் அராஜகமும் பரவி வந்தன. சமூகத்திற்கும் அதைச் சேர்ந்த ஸ்தாபனங்களுக்கும் போதிய பாதுகாப்பு இல்லை. இந்த நிலைமை ஆலயங்களையும் பாதித்தது. இந்த நூற்றாண்டில் தமிழ் நாட்டில் ஆண்ட நவாபுகள் இந்து மத ஸ்தாபனங்களுக்கு, வடநாட்டு முஸ்லிம் சக்கரவர்த்திகளிலும் அரசர்களிலும் சிலர் செய்ததுபோல், நேரடியாகப் பெருந் தீங்கு விளைவிக்காவிட்டாலும், அதற்குச் சில நூற்றாண்டு களுக்கு முன்பு நிகழ்ந்த மாலிக்காபுரின் படையெடுப்பையும், கொள்கைகளையும், பின்னர் மதுரையிலிருந்து ஐம்பது ஆண்டுகளுக்கும் குறைவாகவே ஆட்சி புரிந்த முஸ்லீம் சுல்தான்களையும், அவர்கள் ஸ்ரீ ரங்கம் மதுரை முதலிய பிரபல ஆலயங்களுக்குச் செய்த நாசவேலைகளையும் இந்துக்களுக்குச் செய்த கொடுமைகளையும் மக்கள் மறக்க வில்லை.”[1]

பத்தொன்பதாம் நூற்றாண்டின் தொடக்கத்தில் நாட்டின் ஆட்சியைக் கர்நாடக நவாபிடமிருந்து ஏற்றுக்கொண்ட பிரிட்டிஷ் கம்பெனியாரிடம் இருந்து ஆலயங்களின் நிர்வாக சம்பந்தமாகத் திட்டமான கொள்கைகள் இல்லை. சில பெரிய ஆலயங்களின் நிர்வாகம் மடங்கள் வசம் இருந்தது. வேறு சிலவற்றின் ஆட்சி குறுநில மன்னராயிருந்த ஜமீன்தார்கள் அல்லது பெரிய நிலக்கிழார்கள் ஆகியோரின் குடும்பப் பரம்பரை பாத்தியதையாக அனுமதிக்கப்பெற்றது. பிற கோவில்களின் கண்காணிப்பு, சில காலங்களில் தனி நபர்களிடமும் வேறு காலங்களில் பலர் சேர்ந்த குழுக் களிடமும் குறிப்பிட்ட வருடங்களுக்குத் தர்மகர்த்தர்கள் முறையில் ஒப்புவிக்கப்பட்டது. இவைகளைத் தவிர பல சமுதாயக் கோவில்களும், பெரிய குடும்பங்களின் சொந்த சொத்தாகக் கருதப்பெற்ற கோவில்களும் இயங்கிவந்தன. அரசாங்கம் பல கோவில்களின் சொத்துக்களை முழு வதையுமோ அல்லது ஒரு பகுதியையோ பல்வேறு காரணங்களுக்காக எடுத்துக்கொண்டு, அதற்கு ஈடாக 'தஸ்திக்' என்ற வருடாந்திர மானியத் தொகையைக் கொடுத்து வந்தது. ஆலயங்களின் நிர்வாகத்திலும் அவற்றின் சொத்துக்களின் பராமரிப்பிலும், மொத்தத்தில் பல மாறுதல் கள் ஏற்பட்டுக்கொண்டே வந்தன. கோவில் சொத்துக் களையும், அவற்றிலிருந்து கிடைக்கும் வருமானத்தையும் அபகரிக்கும் பழக்கம் தர்மகர்த்தர்கள் சிலரிடமும், ஆலய ஊழியர்கள் பலரிடமும் இருந்தது, இவ்வித மாறுதல்களில் ஒன்று.

---

1. நவாபின் தளகர்த்தனாயிருந்து, பின்னர் அவருக்கும் கும்பினிக்கும் எதிரிடையாய்ப் போர்க்கோலம் கொண்ட யூசுப்கான் என்பவன், மதுரையில் மீனாட்சி ஆலயத்தைக் கொள்ளையடித்து ஒரு அரண்மனையைக் கட்டிக்கொண்டான்.

கடந்த நூற்றாண்டில் தமிழ்நாட்டில் பல பாகங்களில் அடிக்கடி தோன்றின வறட்சி நிலைமையும் பஞ்சங்களும் மக்களின் பொருளாதார நிலைமையைக் குன்றச் செய்தன. ஆலயங்களில் பூசைகளும் வழிபாடுகளும் திருவிழாக்களும் தகுந்த முறையிலும் ஊக்கத் துடனும் நடைபெறாமலிருக்கும் நிலைமை அவற்றின் மற்றொரு விளைவு. சமய விஷயங் களிலும் ஆலய நிர்வாகங்களிலும் சர்க்கார் நேரடியாகத் தலையிடாமல் நடு நிலைமையைக் கையாண்ட போதிலும், அது அந்நியராகிய பிரிட்டிஷார் வசம் இருந்ததன் காரணமாக மேலைநாட்டுக் கிறிஸ்த்துவப் பாதிரிகளின் மதமாற்றப் பிரச்சாரம், தமிழ் நாடெங்கும் தங்குதடையின்றிச் சகல வசதிகளுடனும் நடைபெற்றது. இக்காரணங்களால் இந்துக்களிடம் சமய விஷயங்களில் ஒருவிதத் தளர்ச்சி மனப்பான்மை தோன்றி வளர்ந்தது. அத்துடன் ஆங்கிலப் படிப்பின்மூலம் லௌதிக வாழ்வில் உயர்ந்த ஒரு சிலரிடம் இந்து சமயத்தின்மீதும், அதன் ஸ்தாபனங்கள் மீதும், கலாச்சாரங்கள் மீதும் முன்னர் குறிப்பிட்டது போல் ஒருவித இகழ்ச்சி மனப்பான்மை தோன்றியது. மொத்தத்தில், பத்தொன்பதாம் நூற்றாண்டில், தமிழ்நாட்டில், முஸ்லிம் கிறிஸ்தவ மதங்களைச் சேர்ந்தவர்களிடம் காணப்பெற்ற சமயப்பற்றும், ஒற்றுமையும், தெம்பும் இந்து சமயத்தினரிடம் குறைவாகவே தென்படுகிறது. எனினும், குடும்பங்களில் சடங்குகளும், ஆலயங்களில் பூஜைகளும் திருவிழாக்களும், மடங்களில் ஆடம்பர சமயவாழ்க்கையும் தொடர்ந்து வழக்கம்போல் நடந்துகொண்டே இருந்ததால், சமுதாயத்தைப் பலஹீனமாக்கிக் கொண்டிருக்கும் மாறுதல் களும், இந்து சமய வாழ்வுக்கு ஏற்பட்டுக் கொண்டிருக்கும் இடையூறுகளும், பலருக்குப் புலப்படாமலே இருந் திருக்கலாம். பிரிவுகளை எடுத்துக் கொண்டால் சைவம்,

வைணவத்தைவிடச் சிறிதளவு அதிகமாகப் பாதிக்கப் பட்டிருந்தது என்று கூறலாம்.

காலப்போக்கில் இயற்கையும் மனிதனும் விளைவித் திருக்கும் எத்தனையோ நஷ்டங்களுக்கும் தொல்லை களுக்கும் இடையே, தமிழ்நாடு உள்ளிட்ட பாரத நாட்டுக்கு, மிகப்பழமையான காலம் முதலே ஒரு பாக்கியம் இடையீடு இல்லாமல் கிட்டியிருக்கிறது. அநேகமாக எல்லா நூற்றாண்டு களிலுமே நாடெங்கும் சமயத்துறையில் பல பெரியோர்களும் ஞானிகளும் தோன்றி, ஈசன்மீது இடையறாத பக்தி செலுத்தி, 'தர்மத்தை விட்டுப் பிறழாது வாழ்வதுதான் மனிதன் உய்வதற்கு இன்றியமையாதது' என அரசர்களுக்கும் குறுநில மன்னர்களுக்கும் மக்களுக்கும் போதித்து வந்திருக்கிறார்கள். அத்துடன், பொதுவாக சமுதாயத்திலும், சிறப்பாக சமயத்துறையிலும் தோன்றி யிருந்த குறைகளையும் தீமைகளையும் கண்டித்து, மும்மலங் களால் கட்டுண்டு, நல்வாழ்வு இன்னதென்று தெரியாமல் தத்தளிக்கும் மக்களுக்கு நம்பிக்கை ஊட்டி, வீடுபேறு மீது நோட்டம் கொள்ளச் செய்யும் வழிகாட்டிகளாயும் திகழ்ந்திருக் கிறார்கள். ஒவ்வொருவரும், விவேகம் பெற்று, தமது முயற்சியால் புலன்களை அடக்கி, ஒழுக்கத்துடன் இம்மையை நடத்தி, ஆன்மீகப் பாதையில் சென்று, ஈசனிடம் சரணடைந்து உய்யும் வழியைத் தேடிக்கொள்ள வேண்டும் என்று உபதேசித்து, மற்றவர்களுக்கு முன்மாதிரியாயும் விளங்கினார்கள். மக்களில் ஒரு பகுதியினர், தங்களுடைய சொந்த மனநிலை போதிய பக்குவம் அடையாதிருந்தும், இவ்வித உயர்ந்த போதனைகளுக்குச் செவிசாய்த்துப் பெரியோர்களைப் பேணி வணங்கி வாழ்ந்தார்கள்.

இவ்வித ஞானிகளில் சிலர் கடந்த நூற்றாண்டில் தமிழ் நாட்டில் தோன்றினார்கள். அவர்களில் ராமலிங்க சுவாமிகள், கோடகநல்லூர் சுந்தரசுவாமிகள், ஆறுமுக நாவலர் ஆகியோர்கள் தலைசிறந்த மூவர்,

ராமலிங்க சுவாமிகளும் சுந்தர சுவாமிகளும் யோகத்தில் முதிர்ந்து, பல சித்திகளையும் பெற்று, ஜீவன் முக்த நிலையை அடைந்தவர்கள் என்று கருதலாம். இருவரும் சம்பிர தாயத்தைத் தழுவி, சில காலம் திருமண வாழ்க்கையில் ஈடுபட்டிருந்த போதிலும், பிரம்மச் சரியத்தைக் காத்து, பந்தமற்ற துறவிகளாயிருந்து, மக்களுடன் தொடர்பு கொண்ட வாழ்க்கையையே நடத்தினார்கள். ராமலிங்கர், இந்து சமயத்தின் அடிப்படையான சாத்திரங்களையும் அவை வகுத்த நெறியையும் ஒதுக்கிவிட்டு, 'ஆன்மநேய ஒருமைப் பாடு' என்ற லட்சியத்தின் அடிப்படையில், சமரச சன்மார்க்கம், ஜீவகாருண்யம் ஆகிய கொள்கைகளை அழுத்தமாக வற்புறுத்தியதுடன், சில புதிய வழிபாட்டு முறைகளையும் அனுஷ்டித்தார். சுந்தரசுவாமிகள் அவ் அடிப்படையான சாத்திரங்களையும் அவை வகுத்த நெறியையும் போற்றி, அவற்றின் உண்மையான தத்துவத்தை விளக்கி, முன்னோர்கள் மிதித்த பாதையில் சென்று ஸ்வாநுபவ வேதாந்த ஞான சூரியனாகத் திகழ்ந்து, மக்களை அந்த அநுபவத்தின்மீது அவாக் கொள்ளும்படி தூண்டினார்.

தம்முடைய லட்சியமாகிய சைவசமயப் பணியையும் தமிழ்ப் பணியையும் செவ்வனே ஆற்ற, ஆறுமுகநாவலர் வாழ்நாள் முழுதும் திருமணம் செய்து கொள்ளாமல் பிரம்மச்சாரியாய் இருந்து, சம்பிரதாய முறையைப் பின்பற்றி, சைவசமயாசாரியர்கள் சந்தானாசாரியர்கள் காட்டிய வழியில் முற்றிலும் ஈடுபட்டு, சைவசமய இலக்கியங்கள்

சிலவற்றிற்கு உரைநடை ஆக்கங்களும், பல தமிழ் இலக்கிய இலக்கண நூல்களுக்குத் தெளிந்த பதிப்புகளும் வெளியிட்டு, இந்து சமயக் கடவுளர்களைப் பழித்துக் கூறிக் கிறித்து சமயத்தை பாதிரிகள் பரப்பும் முறைகளை எதிர்த்து, சைவமதப் பிரச்சாரத்தைச் சண்ட மாருதமாக ஆற்றி தமது சமயப்பணியை உருவாக்கிக் கொண்டார். அவருக்கு முன்னால் தாயுமான சுவாமிகளும், துறைமங்கலம் சிவப்பிரகாச சுவாமிகளும் அவரவர்கள் காலத்தில் தலைதூக்கத் தொடங்கிய இந்து மதத்தை இழிவு படுத்திய கிறித்தவப் பாதிரிகளின் பிரச்சாரத்தை ஓரளவு எதிர்த்திருந்த போதிலும், அதைப்பற்றி வரலாற்றுத் தன்மையுடைய விபரங்கள் கிடைக்கவில்லை.

ராமலிங்க சுவாமிகள் தெய்வ அருள்பெற்ற சிறந்த தமிழ்க் கவியாயிருந்து தேவார திருவாசக பாணியிலும், வேறு யாப்புகளிலும், நெஞ்சை அள்ளும் இன்னிசைப் பாடல்களை ஏராளமாகப் பாடியிருப்பதால் அவை நாடெங்கும் பயிலப்பெற்று வந்தன. தமிழ் மொழி உள்ளவரை ராமலிங்கரின் பாடல்கள் நிலைத்திருக்கும். ராமலிங்கர், ஆறுமுக நாவலர் ஆகிய இருவருக்குமிடையே சில பூசல்கள் தோன்றி, கோர்ட்டு வழக்குகளில் முடிந்ததை, தனி மனிதர் களின் செயலாகக் கருதாமல், சரித்திரக் கண்ணோட்டத் துடன் பார்த்தால், அவை இருவரின் குணவேறுபாடு களையும், அரிய சேவைகளையும், ஆழ்ந்த சிவபக்தியையும் உலகத்திற்குக் காட்ட நேர்ந்த தெய்வசங்கல்பச் செயல் களாகவே கொள்ள வேண்டும். இவ்விருவரின் நூல்கள் நல்லமுறையில் பதிப்பிக்கப்பட்டு வெளியிடப் பெற்றிருக் கின்றன. அவர்களுடைய வாழ்க்கை வரலாறுகளும் தெளிந்த முறையில் எழுதப் பெற்றிருக்கின்றன.

கோடகநல்லூர் சுந்தர சுவாமிகளின் மகிமையைத் தமிழ் மக்கள் சிறிதளவு அறிந்திருந்த போதிலும், அவருடைய குணநலன்களையும், சேவையின் தத்துவத்தையும், ஆன்மாநுபவ சாதனைகளையும் பூராவும் உணர்ந்திருக் கிறார்கள் என்று கருதமுடியாது. தமிழ் நாட்டில் சைவ நெறியும் வேதாந்த நெறியும் இருக்கும்வரை அவற்றின் வரலாற்றில் சுந்தர சுவாமிகளுக்கு நிச்சயமான இடம் உண்டு. அப்பெரியாரின் தெரியக்கூடிய வாழ்க்கை வரலாறும், அவருடைய வேதாந்த நூல்களின் சாரமும் இந்நூலுக்குப் பொருள் ஆகும்.



சுந்தர சுவாமிகள் மனைவியார் ஜானகி அம்மையார்

# 2

# தாமிரவருணிக் கரையிலே
# இளமையும் கல்வியும்

தமிழகத்தில் மிகப் பழமையான காலம் முதலே இயங்கி, நாட்டின் பல பகுதிகளை வளமாக்கி, மக்களிடம் செல்வம் கொழிக்கச் செய்துவந்த முக்கியமான நதிகளில் தாமிர வருணியும் ஒன்று. பொருநை என்ற பெயரில் இது காவிரி, வைகை போன்று இலக்கியத்திலும் வரலாற்றிலும் புகழ் பெற்றிருந்தது. இந்த ஆறு முன்னாளில் தென்பாண்டிய நாடு என்று வழங்கப்பெற்று இக்காலத்தில் திருநெல்வேலி மாவட்டமாயிருக்கும் பிரதேசத்தில், தமிழ்முனி அகத்தியர்

---

1. வால்மீகி முனிவரின் ராமாயணத்திலும், மகாபாரதத்திலும் புராணங்களிலும் தாமிரவருணி குறிப்பிடப் பெற்றிருக்கிறது. சில நூற்றாண்டுகளுக்கு முன்பு 'தாமிர வருணி மகாத்மியம்' என்ற ஒரு பெரிய நூல் வடமொழியில் ஆக்கப் பெற்றிருக்கிறது. கடந்த நூற்றாண்டின் இறுதியில் தோன்றிய சுந்தரம் பிள்ளையின் 'மனோன் மணீயம்' என்ற ஒப்பற்ற நாடகத்தில் இந்தப் பகுதி காணப்பெறுகிறது.

சந்து செவிவழித் தந்த கங்கையும்
பின்னொரு வாயசங் கவிழ்த்த பொன்னியும்,
வருந்திய தேவரோ டருந்தவர் வேண்ட
அமிழ்தினுஞ் சிறந்த் தமிழ்மொழி பிறந்த
மலையம் நின்றிழிந்து, விலையுயர் முத்தும்

நித்தியவாசம் செய்து கொண்டிருப்பதாக இன்னும் பலர் நம்பும் புனிதமான பொதிகை மலையில் உற்பத்தியாகி, பாப நாசம் காடுகளின் வழியாய் ஊர்ந்து, அம் மாவட்டத்தைச் சேர்ந்த அம்பாசமுத்திரம், திருநெல்வேலி, ஸ்ரீ வைகுண்டம் திருச்செந்தூர் ஆகிய நான்கு தாலுகாக்களில் பாய்ந்து, ஆத்தூர் பக்கம் கடலில் சங்கமமாகிறது. இதன் மொத்த நீளம் 75 மைல்கள் தான். எனினும், இது ஒரு ஜீவநதியாய் விளங்கி, தன்னுடன் வந்து சேரும் பல உபநதிகளுடன் நெல்லைச் சீமையின் பல பாகங்களை நெற்களஞ்சியங்களாக ஆக்கியிருப்பதால், இவ்வளவே நீளமுள்ள சிறு நதிகளில்,

வேழவெண் மருப்பும் வீசிக் காழகிற்
சந்தனா டவியுஞ் சாடி வந்துயர்
குங்குமம் முறித்துச் சங்கினம் அலறும்
தடம்பணை தவழ்ந்து மடமயில் நடம்பயில்
வளம்பொழில் கடந்து குளம்பல நிரப்பி
இருகரை வாரமுந் திருமகள் உறையுளாப்
பண்ணும்இப் புண்ணிய தாமிர வர்ணியும்
எண்ணிடில் ஏயுமென் றிசைக்கவும் படுமோ?

-முதல் அங்கம், முதற்களம்58-71

குடிலனின் ஆடம்பரப் பேச்சில் வரும் இந்தப் பகுதி உயர்வு நவிற்சிதான். ஆனால் கவிதை உணர்ச்சியுடனும் செய்யுள் நடை எளிய கம்பீரத்துடனும் இருப்பது கவனிக்கத்தக்கது.

பின்னர், ஜீவகன் போர்க்களத்தில் வீரர்களிடம் பேசும்போது தாமிரவருணி நதியே, அவர்கள் வீரத்துடன் போர் செய்யுமாறு அழைக்கிறது என்று கூறுவதும், அவர்களும் "தாம்பிரவருணிக்கு ஜே ஜே," என்று குரல் எழுப்புவதும், ஜீவகனின் எதிரியான சேர அரசன் புருஷோத்தமன், ஒரு தூதுவன் மூலம் ஒரு குடம் தாமிரவருணி நீரும் ஓர் வேப்பந் தாரும் கொடுத்து தோல்வியை ஒப்புக் கொண்டால் போரை நிறுத்துவதாகச் சொல்லியனுப்புவதும், தாமிர வருணியின் புனிதத் தையும் புகழையும் காட்டுகின்றன.

உலகத்திலேயே இதுபோன்ற சிறந்த ஆறு இல்லை என்று நெல்லை மாவட்டத்தின் முன்னாள் கலெக்டர் ஒருவர் சென்னை அரசுக்கு எழுதிய ஒரு கடிதத்தில் கூறியிருக்கிறார். இந் நதி, அதன் வாய்க்கால்கள், உபநதிகள் ஆகியவற்றின் இருகரைகளிலும் எத்தனையோ செழிப்பான கிராமங்களும், சிவ விஷ்ணு ஆலயங்களும், அநேக தீர்த்த கட்டங்களும் அமைந்திருக்கின்றன. இக் கிராமங்களில் பல நூற்றாண்டு களுக்கு முன்பு இருந்தே வைதீகப் பிராமணர்கள் குடியேறி, தங்களுடைய ஸநாந, ஜப, தவங்கள் கலந்த தூய்மையான சமய வாழ்க்கையை அமைதியுடன் நடத்திவந் திருக்கிறார்கள். பண்டைக்கால நாகரிகப் பிரதேச நதிகளைப் போல, தாமிரவருணியும் அதன் கரைகளின் இருமருங்கு முள்ள விவசாய மக்களின் செல்வத்தைப் பெருக்கிவந்தது மன்றி, மற்றவர்களில் பலரின் கல்விப்பயிற்சி, கலைப் பயிற்சி, சமயப்பயிற்சி முதலியவைகளை ஒழுங்குபடச் செய்து, பல மகான்கள் தோன்றுவதற்கும் காரணமாயிருப்பதால், அதற்கு இந்த மங்கல வாழ்த்துக் கூறி நூலைத் தொடங்குவதின் பொருத்தம் புலப்படும்.

இவ்விதக் கிராமங்களில் நெல்லைக்குச் சுமார்12 மைல்கள் வடக்கேயுள்ள கங்கைகொண்டான் என்பதும் ஒன்று. அது தாமிரவருணியின் முக்கிய உபநதியாய், கிராமத்திற்கு இரண்டு மைல்களுக்குக் கிழக்கே, அதனுடன் 'சீவிலப் பேரியில் சேரும் சித்திராநதியின் வலது கரையில் உள்ளது.

1. ஸ்ரீவல்லபன் ஏரி என்பது சீவிலப்பேரி என்று மருவியிருக்கிறது. இதற்கு முக்கூடல் என்ற பெயரும் உண்டு. இவ்வூரிலுள்ள விஷ்ணு ஆலயத்தின் பெருமாள்மீதுதான், பள்ளுப் பிரபந்தங்களில் முதன்மை யான முக்கூடற்பள்ளு பாடப்பெற்றிருக்கிறது.

*அதில் [1]ஆநந்தவல்லி சமேதராயுள்ள கைலாச நாதர் என்ற பெயருடன் வெகுகாலமாக சிறப்புடன் விளங்கிய ஒரு சிவாலயம் இன்று கவனிப் பாரற்றுக் கிடக்கின்றது![2] இந்தக் கிராமத்தில் கடந்த நூற்றாண்டின் முற்பாதியில் யக்ஞேஸ்வர சிவன் என்ற ஒரு வைதீகப் பிராமணர் தமது மனைவி காமாட்சி அம்மாளுடன் கிரகஸ்தாஸ்ரம வாழ்க்கையை நடத்தி வந்தார். இவருடைய முன்னோர்களைப் பற்றி தெரிந்து கொள்வது அவசியம்.*

*காஞ்சிபுரத்திற்குப் பக்கத்திலுள்ள அடையப்பலம் என்ற கிராமத்தைச் சேர்ந்த ஆச்சாரிய தீட்சிதர் என்ற கீர்த்தி வாய்ந்த வடமொழி மேதை ஒருவர் கி.பி. 16வது நூற்றாண்டில் விஜயநகரப் பேரரசனான கிருஷ்ண தேவராயருக்கு குலகுருவா யிருந்தார். அவருக்குப்பின் அவர் மகனான ஸ்ரீரங்கராஜாத்வரீ அந்தப் பதவியை வகித்தார். கிருஷ்ண*

1. இவ்வூர் சோழப்பேரரசன் கங்கைகொண்ட சோழன் காலத்திலேயோ, அல்லது அவன் மீறைவுக்குப் பிறகு அவனுடைய சந்ததியான இரண்டாம் வீரராஜேந்திரன் மகன் கங்கைகொண்ட சோழன் காலத்திலேயோ நிறுவப் பெற்றிருக்க வேண்டும் என்று தெரிகிறது. இந்த ஊருக்கு கல்வெட்டுகளில் கங்கைகொண்ட சதுர்வேதி மங்கலம் என்ற பெயர் காணப்பெறுகிறது.

2. இந்தக் கோவிலில் சோழ பாண்டிய அரசர்களின் கல்வெட்டுகள் பொறிக்கப் பெற்றிருக்கின்றன. சோழ வம்சத்தவர்களில் முதல் ராஜராஜ சோழன், அவன் மகன் ராஜேந்திர சோழன் என்ற கங்கைகொண்ட சோழன், முதல் குலோத்துங்க சோழன் ஆகியோரின் கல்வெட்டுகள் காணப்பெறுகின்றன. மாறன் சடையன் உள்பட ஐந்து பாண்டிய மன்னர்களின் கல்வெட்டுகளும் இருக்கின்றன. ஊரும் கோவிலும் முதலாவது ராஜேந்திரன் காலத்திற்கு முன்னாலேயே இருந்திருக்க வேண்டும். பின்னர் அதைப் பெரிதாக்கி கங்கைகொண்டான் என்ற பெயரையும்கொடுத்திருப்பார்கள் என்று ஊகிப்பது பொருத்த மாயிருக்கும்.

*தேவராயர் கி.பி.1529ல் காலஞ் சென்ற பிறகும் சமஸ்தான குலகுரு பதவியில் தொடர்ந்திருந்தார். அவருக்கு 1554-ல் ஒரு புதல்வன் பிறந்தான். இவன் வளர்ந்து நாளடைவில் பல கலைகளையும் கற்று, வடமொழியில் எல்லையற்ற பாண்டித்யம் பெற்று, அம்மொழியில் வேதாந்த தத்துவத்தைப் பற்றியும், பிற தத்துவங்களைப் பற்றியும், இலக்கியப் பொருள்கள் பற்றியும், ஏராளமான நூல்களை உரைநடை யிலும் செய்யுள் நடையிலும் எழுதி, அப்பய்ய தீக்ஷிதர் என்ற பெயரில் அழியாப் புகழ் பெற்றார். தத்துவஞான விஷயங்களில் எதிரிகளுடன் வாதம் செய்வதில் நிகரற்றவர். அவருடைய நூல்களில் பரிமளம் என்ற தலைப் புடைய பாஷ்யம், சிவார்க்கமணி தீபிகை, நிராயரக்ஷாமணி, சதுர்மத சார சங்கிரகம், அலங்கார நூல்களாகிய சித்ர மீமாம்ஸை, குவலாயா நந்தம் மிகச் சிறந்தவை. இம் மகான் பதினாறாம் நூற்றாண்டின் இறுதியில் மறைந்தார். இவருடைய பெண்வழிச் சந்ததியில் நான்காவது பரம் பரையைச் சேர்ந்தவர் கங்கைகொண்டான் யக்ஞேஸ்வர சிவன்[1]. இவர் ஸ்ரீவத்ச கோத்திரத்தைச் சேர்ந்தவர்.*

1. இந்த வமிசா வழியின் விபரங்கள், பெரிதும் முயன்றும் துல்லியமாகக் கிடைக்கவில்லை. சுவாமி ராமாநந்த பாரதி (பூர்வாஸ்ரமத்தில் ஸ்ரீ கே.ஆர்.ஆர். சாஸ்திரி) தமது நூலில் திரு.ஜி.எஸ். லோகநாதன் உதவியதாக ஒரு வமிசாவழியைக் கொடுத்திருக்கிறார். ஆனால் யக்ஞேஸ் வர சிவன் அப்பய்ய தீக்ஷிதரின் பெண்வழி சந்ததி என்பது சந்தேகத்திற்கு இடமில்லாதது. அப்பய்ய தீக்ஷிதரின் சகோதரரின் பௌத்திரனானவரும், மதுரை மன்னன் திருமலை நாயக்கருக்கு மந்திரியாயிருந்தவரும், தென்னாட்டில் தோன்றிய வடமொழிக் கவிஞர்களில் தலைசிறந்தவருமான நீலகண்ட தீக்ஷிதர், தமது அந்திம காலத்தில் தாமிரவருணிக் கரையிலுள்ள பாலாமடை என்ற ஊரில் குடியேறி மறைந்தார். அவருடைய அதிஷ்டானம் இன்றும் அங்கே இருக்கிறது. அப்பய்ய தீக்ஷிதரின் சந்ததியார் சிலரின் நெல்லைத் தொடர்பு இதிலிருந்து ஊர்ஜிதமாகிறது.

யக்ஞேஸ்வர சிவன் பழுத்த சைவர். வேதங்கள், தர்மசாத்திரங்கள், புராண இதிகாசங்கள், வேதாந்தங்கள் முதலியவற்றை நன்றாய்க் கற்றுத் தேர்ந்தவர். தம்மிடம் வந்த மாணவர்களுக்கு, அக்காலத்துப் பெரிய பண்டித சீலர்களின் வழக்கப்படி கல்வி பயிற்றுவித்து வந்தார். சமயப்பண்புடன் கலந்த ஆசார நியமனங்களை அனுஷ்டித்து தினசரி வாழ்க்கையை நடத்திக்கொண்டிருந்தார். இவ் உத்தமருக்கு இரண்டு புத்திரர்கள் பிறந்தார்கள். மூத்தவன் பெயர் ராமசுப்பன் (பின்னர் குப்பாணிசிவன் என்று அழைக்கப் பட்டார்.); இரண்டாவது புத்திரன் இந்நூலுக்குப் பொருளாய் உள்ளவரும் பிற்காலத்தில் கோடகநல்லூர் சுந்தரசுவாமிகள் என்று விளங்கியவருமாவர். இவர் 1831ஆம் வருடம் டிசம்பர் மாத 3ஆம் தேதியில் (கலியப் தம் 4933. கொல்லம் ஆண்டு 1007 கர வருடம் கார்த்திகை 20) பிறந்தார். குழந்தைக்கு பரமசாம்பவரான யக்ஞேஸ்வரர், மதுரையில் கோயில்கொண்டு எழுந்தருளியிருக்கும் ஈசனின் பெயராகிய சுந்தரம் என்ற நாமத்தைச் சூட்டினார். அது பிறந்தவுடனேயே மிகுந்த தேஜசுடனும் அழகுடனும் தோற்றம் அளித்ததால், சுந்தரம் என்பதைக் காரணப் பெயராகவும் கொள்ளலாம். பிராமண குடும்பங்களில் நிலவிய வழக்கப்படி குழந்தைக்கு ஜாதகரணம், நாமகரணம், அன்னப்பிராசனம், சௌளம் முதலிய சம்ஸ்காரங்கள் எல்லாம் முறையாக உரிய காலத்தில் செய்யப் பெற்றன. ஜாதகத்தைக் கணித்து எழுதிய சோதிடர்கள் குழந்தையின் வருங்காலச் சிறப்பை எடுத்துக் கூறினார்கள். இரண்டு குழந்தைகளும் சிரித்து விளையாடிக் கொண்டு நாளொரு மேனியும் பொழுதொரு வண்ண மூமாகப் பெற்றோர்களின் அன்பாலும் கவனத்தாலும் வளர்ந்து வந்தார்கள். இவர்கள் அப்பய்ய திக்ஷிதரின் பெண்வழியில் ஐந்தாவது பரம்பரை சந்ததியார்.

ய்க்ஞேஸ்வர சிவன் அவருடைய முன்னோர்கள் போல் தீவிர அத்வைத வேதாந்தியா யிருந்தபோதிலும், பரமசிவனையே பரம்பொருளாகக்கொண்டு, எப்போதும் சிவ சின்னங்களாகிய பஸ்மருத்ராக்ஷதாரணராய் விளங்கி வணங்கி வந்தார். எனினும், எவராலும் வெல்ல முடியாத விதி அவருடைய வாழ்க்கையில் குறுக்கிட்டது. குழந்தைகளின் துப்பாக்கியத்தால், சுந்தரத்திற்கு பதினெட்டு மாதங்கள் முடியுமுன்னே, அவன் பெற்றோர்கள் ஒருவரின்பின் ஒருவராக சிவலோகப் பிராப்தி அடைந்தார்கள். இந்தப் பெரும் இழப்பை, பச்சிளம் குழந்தைகளான சுந்தரமும் ராமசுப்பனும் எப்படி அறிவார்கள்? அவர்களுடைய தாய்மாமனாகிய வெங்கடசுப்பய்யர் இரு குழந்தைகளையும் 1833ல், தமது ஊராகிய பத்தமடைக்கு எடுத்துச் சென்று, அவர்களைத் தம் குழந்தைகள்போல் அன்புடனும் சிரத்தையுடனும் எவ்விதக் குறையுமின்றி வளர்த்து வந்தார்.

சுந்தரத்திற்கு ஐந்து வயதில் படிப்பு தொடங்கியது. கல்விப் பயிற்சிக்காகத் தகுந்த ஆசிரியரிடம் விடப்பட்டான். போதித்ததை எல்லாம் லேசாகக் கற்றுத் தேர்ந்து ஆசிரியர் பிரமிக்கும்படி வெகுசீக்கிரம் படிப்பில் முன்னேறினான். ஏழாம் வயதில் சுந்தரத்திற்கு உபநயனம் நிகழ்ந்தது. பத்தமடை கிருஷ்ணகனபாடிகள் என்பவரிடம் வேதாத்தியயனப் பயிற்சியைத் தொடங்கிய சுந்தரம் அதில் சீக்கிரமே தேர்ச்சியும் வல்லமையும் அடைந்தான். அத்துடன் பிற சாத்திரங்களிலும் பயிற்சி பெற்றான். பூர்வ ஜன்ம வாசனா பலத்தாலும் சிவபெருமானின் அருளாலும், சுந்தரம் சில வருடங்களில் தமது பருவத்திற்கு அதீதமான முறையில் வேதங்கள் சாத்திரங்கள் முதலியவற்றில் சிறந்த பாண்டித்யம் பெற்றான். ஆசிரியர் போதித்தவைகளுடன் தானாகவே பல நூல்களைக் கற்றுத் தேர்ந்தான். இருந்தாலும் குரு முகமாக

முறையான பயிற்சி வேண்டும் என்ற கருத்தில், சுந்தரம் வீரவநல்லூரைச் சேர்ந்த மகாவித்துவானான சுந்தர சாஸ்திரிகளின் மாணாக்கனானான். இந்த அசாதாரணமான மாணவன் அவரிடம் பிரம்மசூத்திரம், உபநிடதங்கள், பகவத்கீதை முதலிய தத்துவ ஞானநூல்களையும் அவற்றின் பாஷ்யங்களையும் ஒழுங்காகக் கற்றான். அக் காலத்தில் சுந்தரம் அடிக்கடி பத்தமடைக்கு வருவதுண்டு. அங்கே சூதசம்ஹிதையைப் படித்துப் பிரவசனம் செய்யத் தொடங்கினான்.

சுந்தரம் பத்தமடையிலேயே வாழ்ந்து வாலிபப் பருவத்தை எய்தினான். தன் வயதிற்கு அதிகமான அறிவும், ஆற்றலும், சமய உணர்வும், ஆன்ம ஞானத்தேட்டமும் பெற்றிருந்தான். அவனுடைய தோற்றத்தையும், அமைதியும் ஞான ஒளியும் குடிகொண்ட முகத்தையும் பார்த்த கிராம மக்கள் அவனை ஒரு தெய்வீகப் பிறவி என்றே கருதினார்கள்; சுந்தரசிவன் என்றே அவனைக் குறிப்பிட்டார்கள். தினந்தோறும் சுந்தரம் அதிகாலையில் எழுந்து, தாமிரவருணி நதிக்குச் சென்று ஸ்நாநம் செய்து, விபூதிருத்ராக்ஷதாரணனாய் வீட்டிற்குத் திரும்பி, குலத்திற்குரிய நித்திய கருமங்களைச் செய்து கொண்டும், வேதாந்த நூல்களைப் படித்து ஞான விஷயங்கள் பற்றிச் சிந்தனைசெய்து ஆன்மஞான அநுபவத்தைத் தியானம் நிஷ்டை முதலிய சாதனங்களின் மூலம் பெற்றுக்கொண்டும், மாலையில் சிவாலயம் சென்று வழிபாடு செய்தபிறகு இரவில் சிலபரமாக நாம சங்கீர்த்தனை, பஜனை ஆகியவற்றில் ஈடுபட்டுக் கொண்டும் வாழ்க்கையை நடத்தினான். சுமார் பதினாறு வயதுடைய ஒரு வாலிபன் இம்மாதிரி வாழ்க்கையை நடத்துவது சாதாரணமாக இயற்கையாக நிகழக்கூடியதில்லை. ஆகையால் சுற்று வட்டாரத்திலுள்ள கிராம வாசிகள், சுந்தரத்தைப் பார்க்க

ஆவல்கொண்டு பத்தமடைக்கு வருவதுண்டு. அவனை அடிக்கடி பார்த்துக்களித்தும், பாராட்டிப் பேசிக்கொண்டும் வந்தார்கள். உள்ளூர்வாசிகளும், தங்களுடைய மத்தியில் ஒரு மகான் உருவாகிக் கொண்டிருக்கிறான் என்பதையும் உணரத் தொடங்கினார்கள். சுந்தரத்திற்கோ, இதைப்பற்றி நினைப்போ கவலையோ கிடையாது. அவனுடைய மாமன் வெங்கடசுப்பய்யர், மற்ற வாலிபர்களைவிடச் சுந்தரம் சற்று அதிகமாகச் சிவபக்தியில் ஈடுபட்டிருக்கிறான் என்று கருதினாரே யொழிய, தமது மருமகனின் உள்மனம் எப்படி வளர்ந்து ஆன்மஒளியுடன் பரிணமித்துக் கொண்டிருந்தது என்பதை உணர்ந்ததாகத் தெரியவில்லை.



சுந்தர சுவாமிகள் இளமை காலம்

# 3

# திருமண வாழ்க்கையும் ஆன்மஞான வளர்ச்சியும்

நாட்கள் ஓடின. பத்தமடை வெங்கடசுப்பய்யர், தமது மருமகனான சுந்தரத்திற்குத் திருமணம் செய்ய முயன்று, தங்களைப்போன்ற ஒரு வைதீகக் குடும்பத்தில் பெண் பார்த்தார். அடைச்சாணி என்னும் கிராமத்தில், சிவபக்தியில் சீலராயும், வேதாகமங்களைக் கற்ற மகா பண்டிதராயுமிருந்த ராமசுப்பய்யர் என்பவரின் புதல்வி ஜானகி என்பவளைச் சுந்தரத்திற்கு மணப்பெண்ணாகப் பெறத் தீர்மானித்தார். அப் பெரியாரும் இசையவே திருமணம் சிறப்பாக நடைபெற்றது. அப்போது சுந்தரத்திற்கு வயது என்ன என்று திட்டவட்ட மாகத் தெரியவில்லை. அக்காலத்தில் பிராமண குடும்பங் களில் வாலிபர்களுக்கு, சுமார் 16 வயது மணப்பருவமாகக் கருதுவது வழக்கமாதலால் சுதந்தரத்தின் திருமணம் 1847அல்லது 1848ல் நடந்திருக்கலாம். கொஞ்சகாலங்கழித்து சுந்தரம் தமது மனைவி ஜானகியுடன் பத்தமடையில் இல்வாழ்க்கையை நடத்தத் தொடங்கினார்.

சுந்தரத்தின் சமய உணர்ச்சியும் ஞானத் தேட்டமும் கலந்த சித்தவிருத்தியைத் தெரிந்த அவருடைய மாமனும் உறவினர் களும் அவருக்குத் திருமணம் செய்வித்ததும், அதற்குச் சுந்தரமும் இசைந்து இல்லறத்தை ஏற்றுக்கொண்டதும் சரியா

என்று இக்காலத்தில் பலர் கேட்கலாம். கேள்வி நியாயமானது தான். பொதுவாக ஒரு வாலிபன், தனக்கேற்ற பெண்ணைக் கல்யாணம் செய்து கொள்வது, தாம்பத்ய இன்பத்தை நுகர்ந்து, குழந்தைகளைப் பெற்று, சமுதாயம் ஒப்பும் முறையில் இல்லறம் நடத்துவதற்கே. இந்தக் கோணத்தி லிருந்து பார்த்தால், திருமணம் சுந்தரத்திற்கு தேவையற்ற ஒரு பந்தமாகவே இருந்திருக்க வேண்டும். ஆனால் அக்காலத்தில் அவருடைய உறவினர்கள் சுந்தரத்தின் வாழ்க்கை, பின்னர் நிகழ்ந்தபடி அமையும் என்று நினைத்திருக்க மாட்டார்கள்; வேதாந்த விருத்தி வெளிப்பட்டிருந்த போதிலும், அவருடைய அடிமனத்தில் உருவாகிக் கொண்டிருந்த பிரம்ம வித்தையில் முற்றும் ஈடுபட்ட சந்நியாச மனப்பான்மையை உணர்ந்திருக்கமாட்டார்கள். தவிரவும், வேதங்கள் ஓதி, நியமம், நிஷ்டை ஆசாரம் முதலியவைகளோடிருக்கும் வைதீக பிராமணர்களுக்கும் விவாகம் ஒரு இன்றியமையாத சம்ஸ்காரம் எனக்கருதப்பட்டது. இந்துதர்மப்படி சந்நியாசம் வாழ்க்கையின் இறுதியில் பெறவேண்டிய நான்காவது ஆஸ்ரமம், கடவுள் பக்தியிலும், ஆன்மஞானத்திலும் தேர்ச்சிபெற்ற மகான்களும், காட்டில் வசிக்கும் ரிஷிகளும் கூட, இரண்டாவதான கிரகஸ்தாஸ்ரமத்தை ஒதுக்கி பொதுவாகத் தாண்டுவதில்லை. இந்த சம்பிரதாயத்திற்கு இணங்கியே சுந்தரம் திருமணத்திற்கு ஒப்புக்கொண்டு ஜானகியின் கையைப் பிடித்ததாகக் கருத வேண்டும்.

சுந்தரத்தின் இவ்வாழ்க்கை அமைதியுடனும் எவ்வித சலசலப்பின்றியும் நிகழ்ந்தது. தெய்வ சங்கல்பமாக அவருடைய இளம் மனைவி ஜானகி, தன்து கணவரின் மனப்போக்கைத் தெரிந்து கொண்டு, அவருடைய சமய ஞான வாழ்வுக்குக் குந்தகம் ஏற்படாத முறையில் நடந்துகொண்டு, முற்காலத்து ரிஷபத்தினிகள் போலவும்

கடந்த நூற்றாண்டில் வங்காளத்தில் தோன்றிய ராம கிருஷ்ணபரமஹம்சரின் மனைவி சாரதாமணிதேவி போலவும் ஒழ்துழைத்து, தகுந்த வாழ்க்கைத் துணை நலமாயிருந்தாள். அடிக்கடி சிவபக்தர்களையும் ஞானி களையும் துறவிக்ளையும் தம் வீட்டிற்கு அழைத்து வந்து அன்னம் அளித்து உபசரித்து, அவர்களுடன் சுந்தரம் வேதாந்த விசாரணையில் ஈடுபடுவதுண்டு. தினசரி வாழ்க்கையில் முன்போல் பூசை, பஜனை சாஸ்திரபடனம் முதலியவை களும் நடைபெற்றுக் கொண்டிருந்தன.

கொஞ்சகாலம் கழிந்தவுடன் சுந்தரத்தின் மாமனார் ராமசுப்பய்யர், சம்பிரதாயப்படி தமது மகளையும் மாப்பிள்ளையையும் அழைத்து சில மாதங்கள் விருந்தினராக வைத்துக் கொண்டிருந்தார். இந்தக் காலத்திலும் சுந்தரம் மற்ற வாலிபர்களைப்போல் உல்லாசமாய் விருந்துண்டு, மனைவியுடன் இன்பவாழ்க்கையை நடத்தும் எண்ணத்தை அறவே ஒழித்து, வழக்கம்போல் சமயப் பிரவர்த்தியிலேயே முழுக்கமுழுக்க ஈடுபட்டிருந்தார். ராமசுப்பய்யரும் லௌகிகக் கண்ணோட்டத்தைத் தவிர்த்து, சிந்தனை செய்து, தமக்கு இப்படி ஒரு மாப்பிள்ளையும், ஜானகிக்கு ஒரு கணவனும் கிடைத்தது அரிய பாக்கியம் என்றே கருதினார். சுந்தரத்தை ஒரு நாள் அழைத்து, சிவபூசை விதிகளைப் போதித்து, தாம் போற்றி வைத்திருந்த பாணலிங்கத்தையும் நடராஜ சிவகாமி மூர்த்திகளையும் பூஜைசெய்து வைத்துக்கொள்ளும்படி அவரிடம் கொடுத்து ஆசீர்வதித்தார். பின்னர் தமது மகளையும் மருமகனையும் பத்தமடைக்கு அனுப்பினார். அவர்களும், லட்சக்கணக்கான ரூபாய்கள் மதிப்புள்ள நிலம், பணம், பொன் கிடைத்திருந்தால் சாதாரண மக்கள் எவ்வளவு சந்தோஷப்படுவார்களோ அதைவிடப் பன்மடங்கு இந்தத் தெய்வீக சீதனம்

கிடைத்ததில் மகிழ்ச்சியுற்றார்கள். முன்னிலும் அதிகமாக சமய வாழ்விலேயே மூழ்கித் திளைத்தார்கள். இந்த வாலிப தம்பதியின் வாழ்க்கை அவ்வூர்வாசிகளுக்குப் பேரானந்தம் அளித்தது.

பூசை, பஜனை, சாஸ்திரபடனம் முதலிய கர்மாக்களில் இடையறாது ஈடுபட்டிருந்த சுந்தரத்திற்கு ஆன்ம ஞான உணர்வு அதிகரித்துக் கொண்டே வந்தது. பெரியோர்கள் கருத்துப்படி இந்தத் துறையில் சற்குரு ஒருவரைத் தேடி அவரிடமிருந்து உபதேசம் பெற வேண்டும் என்ற ஆசை அவ்விடம் மேலிட்டது. பல மாதங்கள் இந்தச் சிந்தனை யிலேயே ஈடுபட்டு, தமக்கு ஒரு சற்குரு கிடைப்பாரோ என்று தவித்துக் கொண்டிருந்தார். அதிர்ஷ்டவசமாக, தமது மாமனார் ஊரான அடைச்சாணியில், தாம் சற்குருவாக அடையத் தகுந்தவராக விசுவேசுவரசாஸ்திரிகள் என்பவர் பல சாஸ்திரங்களையும் கற்று, வேதாந்தத் தெளிவுபெற்று, புனிதமான வாழ்க்கையை நடத்திக் கொண்டிருப்பதை அறிந்தார். கொஞ்சங்கூடத் தாமதமின்றி சுந்தரம் அங்குச் சென்று அவர் பாதங்களில் விழுந்து வணங்கி தம்மைச் சீடராக ஏற்றுக் கொள்ளும்படி விநயமாக விண்ணப்பித்தார். சாஸ்திரிகளும், ஒரு கணநேரத்தில் தமது தீர்க்க திருஷ்டியால் சுந்தரத்தின் பக்குவத்தை அறிந்து ஏற்றுக்கொண்டார். யோகசாதன முறைப்படி குரு சீடனுக்கு உரிய வழியில் தொட்டு அநுக்கிரகம் செய்தார். சுந்தரமும் உடனடியாகச் சமாதி நிலையை அடைந்து வெகுநேரம் கழித்து விழித்தார். பேரின்ப அமுதைப் பருகியவர் போல ஆனந்தக் கண்ணீர் தாரை தாரையாக வழிய நெஞ்சுருகி ஆசிரியர் பாதங்களில் மீண்டும் மீண்டும் வணங்கி, இந்த நிலை தம்க்கு சாஸ்வத மாய்க் கிட்டும்படி அருள்புரிய வேண்டினார். குருவும், சுந்தரத்திடம், அவர் ஏற்கனவே பூரணபக்குவத்தை

அடைந்திருப்பதாயும், உலக சம்பிரதாயத்தைத் தழுவியே தாம் குருவாக நின்று ஆக்கிரகித்ததாகவும் கூறி, சீடனின் உண்மைப் பெருமையை அவருக்கே எடுத்தோதினார். சுந்தரமும் அச்சம்பிரதாயத்தைப் பின்பற்றி சில வாரங்கள் அடைச்சாணியில் தங்கி, நாடறிய தமது குருவுக்குப் பணிவிடை செய்து கொண்டும், தமது யோகசமாதி நிலையில் ஈடுபட்டுக் கொண்டும் வாழ்ந்தார்.

பின்னர் குருவின் ஆணையின்படி சுந்தரம் பத்தமடைக்கு வந்து, மனைவி ஜானகியை அவளுடைய பூரண சம்மதத்துடன், தமது முதல் சிஷ்யையாக ஏற்றுக் கொண்டு ஞானோபதேசம் செய்து, தாமடைந்திருக்கும் பேரின்ப சமாதிநிலையை அநுக்கிரகத்தால் அவளுக்கும் அளித்தார். இருவரும் முன்போல் உணர்வில் ஒன்றிய சிவநேசச் செல்வர்களானார்கள். சுந்தரத்தின் ஆன்ம ஞானப் பூரண பக்குவத்தைக் கேள்விப்பட்ட பலர், அவரிடம் வந்து சரணடைந்து ஞானோபதேசம் பெற்றுச் சீடர்களானார்கள். நாளடைவில் சீடர்களின் குழாம் அதிகரித்துக் கொண்டே வந்தது. சுந்தரமும் வாழ்க்கையின் லட்சியத்தையும் அதை நிறைவேற்றுவதற்குரிய திட்டத்தையும் ஒருவாறு அமைத்துக் கொண்டு, தமது சமயப்பணியைத் தொடங்க ஆயத்த மானார். சமய உணர்விலம், வேதாந்த ஞானத் தெளிவிலும், யோக மார்க்கத்திலும் பலபடிகள் ஏறியிருந்த சுந்தரம், இன்னும் கொஞ்சம் சம்பிரதாய முறைப்படி தன்னைத் தயார் செய்துகொள்ள ஆசைப்பட்டார்.

## 4

# தீர்த்த யாத்திரையும் ஸ்தல யாத்திரையும்

இந்து கலாசாரக் கொள்கைகளின்படி, சமுத்திரங்கள் நதிகள் ஆகியவற்றிலுள்ள தீர்த்த கட்டங்களில் முறையாக ஸ்நாநம் செய்வது, அல்லது ஸ்நாநத்துடன் சில கிரியைகளையும் சேர்த்துச் செய்வது, ஆலயங்களில் தெய்வங்களை வணங்குவதுபோல், ஒரு சமய வழிபாடு. பாரதநாடு முழுவதையும் எடுத்துக் கொண்டால், கங்கை காவிரி உள்பட ஏழு பெரிய ஆறுகளை நமது முன்னோர்கள் புண்ணிய நதிகளாகக் கருதினார்கள். இந்நதிகளில் அநேக ஸ்நாநகட்டங்கள் அமைந்திருக்கின்றன. அதேபோல் ராமேஸ்வரம், தனுஷ் கோடி, கன்னியாகுமரி, பூரி போன்ற ஸ்தலங்களிலுள்ள சமுத்திர ஸ்நாந கட்டங்களும் புண்ணியமானவை. வெகுகாலமாக மக்கள் யாத்திரா மார்க்கமாகச் சென்று அவைகளில் தீர்த்தமாடி வந்திருக்கிறார்கள்; இன்றும் வந்து கொண்டிருக்கிறார்கள். அத்துடன் ஒரு புண்ணிய நதியின், எட்டக் கூடிய மூலத்திலிருந்து பாதயாத்திரையாகப் புறப்பட்டு, அதைப் பல ஸ்நாந கட்டங்களிலும் சங்கமத்திலும் ஸ்நாநம் செய்து, மீண்டும் அதே வழியாகத் திரும்புவது தனிச்சிறப்புடைய ஒரு தீர்த்த யாத்திரையாகவும் கருதப்பெற்றது. இந்த முறை கொஞ்சகாலமாகப் பெருவழக்கில் இல்லாமல் இருந்தது.

சுந்தரம் தாமிரவருணியின் மடியில் வளர்ந்து அதன் பெருமையை உணர்ந்தவர். ஏழு பெரிய புண்ணிய நதிகளில்

ஒன்றாயில்லாவிட்டாலும், மக்கள் அதை ஒரு புண்ணிய நதியாகவே பண்டைக்காலம் முதல் கருதி வந்தார்கள். அப்படி இல்லாவிட்டால் அதன் பெருமையைப் பற்றியும் ஸ்நானகட்டங்களின் புனிதத்துவத்தைப் பற்றியும் 'தாமிர வருணி மகாத்மியம்' என்ற ஒரு பெரிய நூல் வடமொழியில் இயற்றப்பட்டிருக்குமா? சுந்தரம் தமது சீடர் குழாத்துடன், இந்த நதியின் மூலப் பிரதேசத்தில் பாபநாசம் காட்டிலுள்ள பாண தீர்த்தத்திலிருந்து தொடங்கி, நதிக்கரையோரம் நடந்து வழியிலுள்ள ஸ்நானகட்டங்களில் தீர்த்தமாடி, சிவாலயங் களில் வழிபாடுகள் செய்துகொண்டு சென்றார்; தங்கிய ஊர்களிலும் க்ஷேத்திரங்களிலும் சிவபூஜையையும் சமயப் பொருள்களைப் பற்றிய பிரவசனத்தையும் செய்தார். இந்தத் தீர்த்தயாத்திரை முடிந்தபின், பத்தமடைக்குத் திரும்பினார். இந்த யாத்திரை மிகவும் முக்கியமானது. அநேகமாக மறைந்து போன ஒரு சம்பிரதாயம் உயிர் பெற்றது; மக்களிடம் சமய உணர்ச்சியைத் தூண்டியது. சுந்தரத்தின் புகழ் நெல்லைப் பிரதேசம் முழுவதும் பரவியது. இந்தக் காலம் முதல் சுந்தரம் பத்தமடையில் தங்கிய போதிலும், அடிக்கடி அடைச் சாணிக்குப் போய்த் தமது ஞானகுருவைத் தரிசிப்பார். நெல்லைக்குப் போய் ஸ்ரீ காந்திமதி அம்பாள் ஆலயத்தில் அம்மனை வழிபடுவார்.

முன்னாளில் - ஏன்? இன்றும் கூடத்தான் - ஒவ்வொரு இந்துவும், தனது வாழ்நாளில் ஒரு தடவையாவது காசிக்கு யாத்திரையாகச் சென்று கங்கா ஸ்நானம் செய்து திரும்புவதை ஒரு லட்சியமாகக் கொண்டான். சாலைவசதிகளும் வாகன வசதிகளும் மிகவும் குறைவாக இருந்ததால், ராஜாக்கள்,

1. சுவாமி பிரம்மாநந்தா என்பவர் இதுபோன்ற யாத்திரையை நர்மதைநதியில் செய்ததாக சுவாமி ராமா நந்த பாரதி தமது நூலில் கூறியிருக்கிறார். (பக்கம்.6)

ஜமீன்தார்கள், அவர்களை ஒத்த பெரும் பணக்காரர்கள், மடாதிபதிகள் போன்றவர்களைத்தவிர, மற்ற எல்லோரும் பாதயாத்திரையாகவே காசிக்குச் செல்வது வழக்கம். சில மாதங்கள் கழிந்தவுடன் சுந்தரம் தமது சீடர்களுடன் வடநாட்டு, ஸ்தல யாத்திரையைத் தொடங்கினார். இதைப் பற்றிய பூரா விபரங்களும் கிடைக்கவில்லை. வழியில் மதுரை, திருவானைக்கா, திருவையாறு, மாயூரம், சீர்காழி, சிதம்பரம், விருத்தாசலம், காளஹஸ்தி முதலிய பல பிரபல தமிழ்நாட்டு சிவ ஸ்தலங்களை தரிசனம் செய்துகொண்டு, காசியை அடைந்து, அங்கே சிலகாலம் தங்கினார். எப்போதும்போல் சுந்தரம் கங்கையில் மணிகர்ணிகா கட்டத்தில் ஸ்நாநம் செய்யும்போது, ஒருநாள், வழக்கம் போல் ஆறுமாதம் ஜலத்திற்குள்ளே சமாதியிலிருந்த மகாகணபதி என்ற ஒருவர், இவரைக் கண்டு மகிழ்ந்து வரவேற்றதாயும், இருவரும் ஜலத்திற்குள்ளேயிருக்கும் போது ஆலிங்கனம் செய்து கொண்டதாகவும், அச்சமயம் பெரிய ஜோதி ஒன்று ஜலமட்டத்தின் மேல் எழுந்ததாகவும் சொல்லப்படுகிறது. இவ்விரு மகான்களின் சிலைகள் இன்றும் மணிகர்ணிகா கட்டத்தில் இருக்கின்றன. அவற்றை யாத்ரிகர்கள் எல்லோரும் தரிசனம் செய்து வணங்கி வருகிறார்கள். சுந்தரம், கங்கா ஸ்நாநம் செய்த பிறகு தினந்தோறும் விசுவேசுவரப் பெருமான் ஆலயத்திற்குச் சென்று வணங்கி வந்தார். யாத்திரையை முடித்துக்கொண்டு கொஞ்ச காலங் கழித்துப் பத்தமடைக்குத் திரும்பினார். தாம் வடநாட்டிலிருந்தபோது தமது குரு விசுவேவர சாஸ்திரிகள் சித்தியடைந்து விட்டார் என்ற செய்தியைக் கேட்டு, அடைச்சாணி சென்று, அவருடைய சமாதியைத் தரிசனம் செய்து திரும்பினார்.

பின்னர், சுந்தரம், அடிக்கடி தமது பரம குருவின் புத்திரரிடமிருந்து கற்றுக்கொண்ட சகஜ நிஷ்டையில் ஈடுபட்டு, சமாதிநிலையில் இருந்துவந்தார். அவருடைய சமய வாழ்க்கையில் சில மாறுதல்கள் மெள்ள மெள்ளத் தோன்றத் தொடங்கின. மனமும் புத்தியும் ஞான மார்க்கத்தில் முனைந்தன. வைதீகப் பிராமண வாழ்க்கை முறையில் திளைத்து, ஆசார சீலனாய், ஸ்நாநம், ஜபம், பூசை, ஆலய வழிபாடு முதலியவைகளில் இடைவிடாது ஈடுபட்டிருந்த சுந்தரம், அடிக்கடி நிஷ்டையில் இருக்க நேர்ந்ததால், அவற்றைக் கொஞ்சங் கொஞ்சமாகக் கைவிட நேர்ந்தது. ஆன்மஞானப் பாதையில் பலபடிகள் தாண்டி முன்னேறிக் கொண்டிருந்தார். இவை எல்லாம், இறுதியில் சுந்தரம் வைதீக சம்பிரதாய ஆசார வாழ்க்கையை அறவே துறந்து, அதிவர்ணாச்ரமியாயும் அவதூத சந்நியாசியாயும் மாறப் போவதற்குச் சூசகங்களாயிருந்தன.

கோடக நல்லூரிலிருந்து வைதீகப் பெரியாரான ராமசாமி சிவன் முதலியோர், பத்தமடை சென்று, சுந்தரத்தை தங்களூருக்கு அழைத்துக் கொண்டுபோய் சூதசம்ஹிதை படனத்தை பஞ்சாக முறைப்படி ஐந்து நாட்களில் அவரை நடத்தச் சொல்லிக் கேட்டுப் பரவசமடைந்தார்கள். ஒரு வித்துவான் வடமொழியிலுள்ள மூலத்தைப் படிக்க சுந்தரம் அதை விளக்கிக்கொண்டு போவார். ஐந்து நாட்களும் திருநாட்கள் போல் கழிந்தன. பஜனைகளும் அன்ன தானமும் சிறப்பாக நடைபெற்றன. அவ் ஊர் சிவன் கோவிலின் ஒரு பகுதியில் ஒரு பஜனை மடத்தைக் கட்டும் படி சுந்தரம் பிறப்பித்த ஆணையை மக்கள் சிரமேற்கொண்டு ஒரு பஜனைமடத்தை வெகுசீக்கிரம் கட்டி முடித்து, சத்காலட்சேபங்களை தினந்தோறும் நடத்த வசதி செய்து கொண்டார்கள்.

சுந்தரத்தின் ஆன்மசக்தி முதிர்ந்து கொண்டிருந்தது. தெய்வீக ஒளி அவரிடம் குடிகொண்டு வாழ்க்கையை இயக்கிக் கொண்டிருந்தது என்று கூறலாம். அவர் பத்தமடையில் இருந்தபோது ஒருவரும் எதிர் பாராத முறையில் ஒரு அற்புதம் நிகழ்ந்தது. யக்ஞேஸ்வரன் என்ற ஐந்து வயதுள்ள பையன் வாய்க்காலில் விழுந்து விபத்துக் குள்ளானான். அவனது சடலம் மறுநாள் ஜலத்தில் மிதந்த போது அது எடுக்கப்பட்டது. உயிரற்ற நிலையில் குழந்தை இறந்து கிடந்தான். அவ்ன் உறவினர்களும் மற்றவர்களும் வருந்தி அழுதுகொண்டிருந்தார்கள். அச்சமயம் சுந்தரம் அங்கு வந்து நடந்ததைக் கேட்டுத் தெரிந்து கொண்டார்; அவரிடம் கருணை பொங்கியது. ஒருவரும் அழக்கூடாது என்ற ஆணையைப் பிறப்பித்துவிட்டு, குழந்தையைத் தூக்கிக் கொண்டு போய், அதன்மீது மந்திர ஜலத்தைத் தெளித்து, திருநீற்றைப் பூசி, காலனை உதைத்த கடவுளைத் தியானம் செய்தார். சில நிமிடங்களில் உயிர்பெற்று எழுந்த குழந்தையை அழைத்துவந்து அதன் பெற்றோர்களிடம் ஒப்புவித்துச் சென்றார். கிராமவாசிகள் இந்த அதிசயத்தைக் கண்டு பிரமித்துப் போனார்கள். இந்தச் சம்பவம் நடந்ததைப் பலரும் பார்த்ததால் அதைப் பற்றிய விவரங்கள் பரவின. இதுவரைக்கும் வெளிவந்த, கோடக நல்லூர் சுந்தர சுவாமிகளின் சரித்திரங்களில் இது சொல்லப்பட்டிருக்கிறது. ஆதலால், இக் காலத்தில் இதைச் சிலர் நம்பாவிட்டாலும், இதன் உண்மையை சந்தேகப்பட நியாயமில்லை. தற்கால விஞ்ஞான, பகுத்தறிவுக்கு எட்டாத பல விஷயங்கள் இருப்பதை உணர்வதுதான் மெய்யான பகுத்தறிவு. பின்னர் இது போன்ற ஒரு நிகழ்ச்சி மதுரையில் நடைபெற்றதைக் கூறும்போது சில விஷயங்களைச் சற்று விரிவாகக் கூறுவோம். இனி, சுந்தரம், இந்த நூலில் சுந்தரசுவாமிகள் என்றே அழைக்கப்படுவார்.

# 5

## துறவும் 'கோடக நல்லூர்' சுந்தர சுவாமிகள் ஆனதும்

சுந்தர சுவாமிகள் கோடக நல்லூரில் நகிழ்த்திய சூதம்ஹிதை பஞ்சாக படனம் அந்த வட்டார மக்களிடம் பெரும். உற்சாகத்தைக் கிளப்பியது. பக்கத்திலிருந்த சுத்தமல்லி கிராமத்தைச் சேர்ந்த பிராமண சமூகத்தினர், சூரியநாராயண சிவன் என்ற வைதீக சீலரின் தலைமையில் பத்தம்டை சென்று சுவாமிகளை வணங்கி, தங்கள் கிராமத்திற்கு விஜயம் செய்ய வேண்டும் என்று கேட்டுக் கொண்டார்கள். சுந்தர சுவாமிகளும் அதற்கு இணங்கி சுத்தமல்லிக்குப் புறப்பட்டார். மக்கள் அவரை வணக்கத்துடன் வரவேற்றார்கள். அங்கே நன்றாய் அமைக்கப் பெற்ற மேடையின் மீதுள்ள உயர்ந்த ஆசனத்தில் அமர்ந்து பிரவசனத்தை ஆற்றினார். சபையில் கடையம் சேஷாசல தீட்சிதர் போன்ற பல பண்டிதர்கள் பயபக்தியுடன் இருந்து சிரவணம் செய்தார்கள். சூரியநாராயண சிவன் சூதசம்ஹிதை மூலத்திலிருந்து சுலோகங்களைப் படித்தார். சுந்தர சுவாமிகள் அவற்றிற்கு விரிவுரையும் விளக்கங்களும் சொல்லிக் கொண்டிருந்தார். முதல் நாள் நிகழ்ச்சி செவ்வனே முடிந்தது. இரண்டாம் நாள் பிரவசனம் நடந்து கொண் டிருக்கும்போது திடுக்கிடும் சம்பவம் ஒன்று நிகழ்ந்தது.

சேஷாசல தீட்சிதரைப் பார்த்து விளக்கம் கூறுமாறு கண்களைக் காட்டிவிட்டு, சுந்தர சுவாமிகள் திடீரென்று தமது ஆசனத்திலிருந்து எழுந்து இறங்கி விரைவாக வெளியில் சென்று விட்டார். சபையில் இருந்தவர்கள் சற்று பயமுற்று, இன்னதென்று தெரியாமல் கலக்க மடைந்தார்கள். சில நாழிகைகள் கழித்து, சுவாமிகள், அதுவரை வைதிகமுறையில் வைத்திருந்த குடுமியை எடுத்து மொட்டையடித்துக் கொண்டும், தம் பூணூலைக் கழற்றி எறிந்துவிட்டும் மடமடவென்று கூட்டத்தில் நுழைந்து, தமது ஆசனத்தில் ஏறி, ஒன்றும் நடவாதது போல் பிரவசனத்தில் தொடர்ந்து ஈடுபட்டார். கூட்டத்திலிருந்தவர்கள் திகைப்பு அடைந் திருந்ததைப் பார்த்த சுவாமிகள், ஒருவனுக்கு எந்த நேரத்தில் வைராக்கியம் முற்றுகிறதோ, அந்தக் கணத்திலேயே அவன் துறவைத் தழுவ வேண்டும் என்பது பெரியோர் கருத்து எனக்கூறி, இந்த நியதியின்படி தமக்கு வைராக்கியம், பிரவசனம் நடத்திக் கொண்டிருக்கும் மத்தியில் சிந்தித்து விட்டதால், அதற்குப் பொருத்தமாக இந்தக் கோலத்தை உடனடியாக ஏற்றுக்கொண்டு விட்டதாக சமாதானம் சொன்னார். இதைக் கேட்ட பக்தர்கள் ஒருவாறு தெளிந்து ஆனந்தமடைந்து சுவாமிகளை வணங்கிப் பாராட்டினார்கள். அன்று நிகழ்ச்சி முடிந்ததும் சுந்தர சுவாமிகள், கோடக நல்லூர் ராமசாமி சிவன், நீலகண்டய்யர் முதலானவர்களைக் கூப்பிட்டு, தாம் பூசித்துவந்த பாணலிங்கத்தையும் பிற மூர்த்திகளையும் அவர்களிடத்தில் ஒப்படைத்து பஜனை

1. சுந்தர சுவாமிகளின் இந்தத்துறவை வித்வத்சந்நியாசம் என்று கூறப்பெற்றிருக்கிறது. ஞானம் நாடித் துறவு கொள்வதை 'விவிதிச் சந்நியாசம்' என்றும், ஞானம் உணர்ந்தோன் துறவை 'வித்வத் சந்நியாசம்' என்றும் கூறுவது மரபு என்று, அவற்றின் விபரங்களை சுவாமி ராமாநந்த பாரதி தமது நூலில் விளக்கியிருக்கிறார். (பக்கம் 9-10)

மடத்தில் வைத்து வழிபாடு செய்யும்படி கட்டளையிட்டார். அவர்களும், தங்களுக்கும் தங்கள் ஊருக்கும் கிடைத்த அரும்பெரும் பாக்கியமாக அவற்றைப் பெற்றுக் கொண்டு செயலிலும் இறங்கினார்கள். அப்புறம் சுவாமிகள் திருநெல்வேலி வந்து சிருங்கேரி ஆச்சாரியாரின் மடத்தில் தங்கினார்கள். மேலே கூறிய சம்பவம் நடைபெற்றபோது அவருக்கு வயது சுமார் இருபத்தொன்று இருக்கலாம். அவருடைய வாழ்வில் ஒரு பெரிய திருப்பம் ஏற்பட்டு விட்டது.

சுந்தர சுவாமிகளின் கீர்த்தி நெல்லைப் பிரதேசம் முழுவதும் பரவியிருந்ததால், சமயப்பற்றும், ஞானத் தேட்டமுடைய பலர் அவரைச் சுற்றி மொய்க்க ஆரம்பித்தார்கள். அவருடைய துறவு பூரணமாய் விட்டது. முன்னர் அவர் அனுஷ்டித்துவந்த வைதிக பிராமணரின் ஆசாரங்கள், பூசை முதலானவை கலந்த வாழ்க்கை முறையை உதறித் தள்ளிவிட்டார். அத்துடன் பூணூலையும் கழற்றி எறிந்துவிட்டு, தலையையும் மொட்டை அடித்துக் கொண்டார். அகத்தூய்மையில் அவர் வெகுநாளாகக் கொண்ட பற்றற்ற நிலைமையைப் புறத்தோற்றத்திலும் காட்டி மக்களுக்குத் தமது உண்மை நிலைமையை வெளிப்படுத்திக் கொண்டார். யோகசமாதியின் மூலம் பேரின்பநிலையை எய்தி ஆன்ம ஞான ஒளியைப் பருகித் துய்த்துக்கொண்டிருந்தார். எப்போது, எங்கே நிஷ்டையில் ஈடுபடுவார்? எவ்வளவு காலம் அந்த நிலையிலிருப்பார்? என்பனவற்றை ஒருவராலும் சொல்ல முடியாது. சுந்தர சுவாமிகள் பெரும்பாலும் கோடநல்லூரில் தாமிரவருணி நதியின் கரையிலுள்ள அடர்ந்த நாணற்புதர்களுக்குள், ஒருவருக்கும் தெரியாமல் போய்ச் சமாதியில் அமர்ந்து விடுவது வழக்கம். சீடர்கள் சுவாமிகளைத் தேடிப் போய்

உணவு கொடுப்பதுண்டு. சில சமயங்களில் சுவாமிகளை எவ்வளவு அலைந்து தேடியும், 'சுவாமி, சுவாமி' என்று உரத்துக் கூக்குரலிட்டும், காணமுடியாமல் ஏமாந்து திரும்புவார்கள். இவ்விதமாய் தேர்ந்த ஒரு சந்தர்ப்பத்தில் பரமசிவனே ஒரு அந்தணர் வேடம் பூண்டு சுந்தர சுவாமிகளுக்கு அன்னம் அளித்துக் காட்சியும் தந்ததாகச் சொல்லப்படுகிறது. சுந்தர சுவாமிகள் ஈசனின் கருணைக்கு வியந்து, மெய்யுருகி அவரைத் துதித்துவிட்டு மீண்டும் சமாதியில் இருந்தார். இவருடைய பூரணமான ஆன்ம வாழ்க்கையும், நீண்ட கால சமாதி நிலையும் பல மாதங்கள் தொடர்ந்து கோடக நல்லூரில் தாமிரவருணிக் கரையிலுள்ள நாணற்புதர்களில் நிகழ்ந்ததால், இக் காலமுதல் இவருக்கு கோடகநல்லூர் சுந்தர சுவாமிகள் என்ற பெயர் நிலைத்து விட்டது. கங்கை கொண்டானில் பிறந்து பத்தமடையில் வளர்ந்த போதிலும், அவருடைய ஆன்ம வாழ்வுக்கு இன்றியமையாத சமாதிநிலைக்கு உகந்தகளானாயிருந்த கோடக நல்லூருடன், அவருடைய பெயரை மக்கள் தொடர்பு படுத்தியதில் பொருத்தக் குறைவு ஒன்றும் இல்லை.

# 6

# நெல்லையும் வாசமும் சமயப் பணியும்

சுந்தர சுவாமிகள் தமது 24வது வயது முதல் (அதாவது 1855க்கப்புறம்) பெரும்பாலும் திருநெல்வேலியில் இருந்து கொண்டு பல இடங்களுக்குத் தேவையான போது சென்று சமயப்பணியை ஆற்றி, சீடர்களுக்கும் மக்களுக்கும் ஞானோபதேசமும் செய்து வந்தார். இவர் போன்ற சந்நியாசிகளுக்கு சொந்த ஊர் என்றும் வீடென்றும் கிடையாது. அவர், தாம் நினைத்தபோதெல்லாம் நிர்விகல்ப சமாதி நிலையை எய்திப் பேரின்பத்தை அனுபவித்து ஆன்ம ஒளியில் திளைத்துக் கொண்டிருந்த போதிலும், லோக சங்கிரகத்திற்குப் பாடுபடுவதே தமது கடமை என்று உணர்ந்து அயராது உழைத்து வந்தார். அதற்காகவே, குடும்பத்தை விட்டும் சமுதாயத்தை விட்டும் துறந்து வெளியேறி, தமது திட்டத்தை வகுத்துக் கொண்டார்.

நெல்லையில் அக் காலத்தில் அம்மன் சந்நதித் தெருவில் வாழ்ந்த குஜராத்தி பிராமண சமூகத்தைச் சேர்ந்த முக்கிய ஸ்தர்களான கிருஷ்ண தருவாடியார் சதாசிவ தருவாடியார் போன்றவர்களும், முத்து செல்லமய்யர் என்பவரும் பிறரும் சுவாமிகளுக்குச் சீடர்களானார்கள். எப்போதும் சுவாமிகள் கூட இருந்து அவர்களது சமயப்பணிக்குத் துணைபுரிந்து

வந்தார்கள். சுவாமிகளின் ஆணைப்படி ஒரு பஜனை மடத்தையும் நிறுவினார்கள்.[1] அங்கே நடராசமூர்த்தியின் படம் வைக்கப்பெற்று ஒழுங்காகவும் முறையாகவும் பூசை செய்யப்பெற்று, பஜனைகளும் நடைபெற்றன. சுவாமிகள் சங்கர மடத்திலேயே தங்கியிருப்பது வழக்கம், பின்னர் கொஞ்ச காலம் இந்த பஜனை மடத்திலும், குறுக்குத்துறை சுப்பிரமணிய சுவாமி கோவிலிலும் கம்பாநதி மண்டபத்திலும் அவர்களுடைய யுத்தம்போல் வசித்து வந்தார். அக்காலத்தில் நெல்லையைச் சேர்ந்த பிரபல வேதாந்தியான ஐயாசாமி பிள்ளை, மாவடி சிதம்பரம் பிள்ளை முதலியோர்கள் சுந்தர சுவாமிகளின் சீடர்களானார்கள். நெல்லையில் இருந்து கொண்டு, சுவாமிகள் பல கிராமங்களுக்குச் சென்று, அவரைத் தரிசனம் செய்யவும் அவரது அமுத மொழிகளைக் கேட்கவும் குழுமிய மக்களுக்கு உபதேசம் செய்து வந்தார். பொதுவாக, சுவாமிகள் சூதசம்ஹிதையைப் பொருளாகக் கொண்டு பிரவசனம் செய்வதும், சிவநாம பஜனை செய்வதும் வழக்கம். நெல்லையிலேயே ஆச்சாரியார் மடத்தில் சூதசம்ஹிதையை பஞ்சாகமாய்ப் படித்து பஜனையும் நடத்தினார். இதில் ஆயிரக்க்ணக்கான ஜனங்கள் கலந்து கொண்டார்கள். நெல்லைக்கு அணி செய்யும் ஸ்ரீ காந்திமதி அம்பாள் நெல்லையப்பர் கோவிலுக்கும் சுவாமிகள் அடிக்கடி போவதுண்டு. அதன் திருவிழாக்கள் சரிவர நடைபெறு வதிலும் அக்கறை காட்டினார்.

ஸ்ரீ காந்திமதி அம்பாள் திருக்கல்யாண உத்சவம் ஐப்பசி மாதம் வருடா வருடம் நடைபெறும். சுவாமிகள்

1. பஜனை மடத்திற்கு தனிக் கட்டிடம் கட்டினதாகத் தெரியவில்லை. அம்மன் சந்நதித் தெருவிலுள்ள தருவாடியார் வீடு, பின்னர் தெற்கு ரதவீதியிலுள்ள பஜனை சிதம்பரம்பிள்ளை வீடும் பஜனை மடமாக அமைந்தன.

நெல்லைக்கு வந்த வருடத்தில் இந்தத் திருவிழா நடைபெறுவதில் ஊக்கங்காட்டினார். அதன் செயல் முறைகளில் சுவாமிகளின் ஆலோசனையின்பேரில் சில மாறுதல்கள் செய்யப்பெற்றன. ஏழாந் திருநாளில் அம்பிகையைத் தவழும் குழந்தையாகிய பாலாம்பிகை வடிவமாகவும், எட்டாந்திருவிழாவில் கோலடிக்கும் பெண் போன்ற கோலத்திலும் அலங்காரம் செய்யப்பெற்று விழா நடை பெற்றது. ஒரு பக்தர் இந்த விழாவிற்கு இரண்டு தங்கக் கோல்களைச் செய்து அளித்தார். இந்தத் திருவிழா முறை இன்றும் நடைபெற்று வருகிறது என்று சொல்லப் படுகிறது.

சுந்தர சுவாமிகள் கம்பாநதி மண்டபத்தில் தங்கியிருக்கும் போது ஒரு சம்பவம் நடைபெற்றது. அன்று தீபாவளி தினம். குஜராத்தி பிராமணராகிய ராமச்சந்திர மேத்தா என்பவர் சில பக்தர்களுடன் சுவாமிகளை தரிசனம் செய்து, அவர்களுடைய பொன்மொழிகளை ஆவலுடன் கேட்டுக் கொண்டிருந்தார். சுவாமிகள் எத்தனையோ விஷயங்களைப் பற்றி உபதேசம் செய்து கொண்டிருக்கும் போது, வலது கையின் உள்ளங்கையில் நெருப்பு இருப்பதாகவும், சாப்பிடும்போது அன்னம் உள்ளங்கையில் படாமல் எடுத்து உண்ணுவது உத்தமம் என்றும் கூறினார். அப்போது காமாட்சியம்மன் (கம்பாநதி மண்டபத்தில் வீற்றிருக்கும் தெய்வம்) கோவிலில் பூசை செய்யும் அர்ச்சகரான சுப்பிரமணிய பட்டர், தமது தள்ளாத வயதில் பூசை சாமான்களையும், ஒரு பாத்திரத்தில் நெருப்பையும் கொண்டு வந்தார். வரும் வழியில் மழை பெய்ததால் நெருப்பு அணைந்து விட்டது. சுவாமிகள், நெருப்புக் கொண்டுவந்து பட்டருக்குப் பூசையை நடத்த உதவும் படியும், பக்கத்திலுள்ள தடிவீரய்யன் கோவில் தெருவுக்குப்போய் யார் வீட்டிலிருந்தாவது அக்கினியைக் கொண்டு

வரும்படியும் ஆவுடையப்ப பிள்ளை என்பவருக்கு ஆணையிட்டார். இதைக் கேட்டுக்கொண்டிருந்த ராமச்சந்திர மேத்தா, மிகவும் விநயத்துடன் சுவாமிகளிடம் அவர்கள் சற்று முன்பு கூறியதை ஞாபகப்படுத்தி, தமது உள்ளங்கையில் உள்ள நெருப்பை வெளிப்படுத்தி பட்டருக்கு உதவக் கூடாதே ; என்று வினவினார். சுவாமிகள் புன்முறுவல் பூத்து, 'அப்படியே செய்வோம்' என்று பதிலளித்து, மேத்தாவிடம், அவர் அணிந்திருந்த விலையுயர்ந்த மேலாடையைக் கேட்டு வாங்கி, ஒரு பகுதியை மடித்துக் கையில் வைத்துத் தேய்க்கவே குபீர் என்று அக்கினி ஜ்வாலை எழுந்தது. மேத்தாவோ தமது அங்கவஸ்திரத்தில் பிடித்த தீயை அணைக்க முயல, சுவாமிகள் அவரை அமர்த்தி, அதை அக்கினி பகவானுக்கு அர்ப்பணம் செய்து விடுவது நல்லது என்று கூறினார். அந்த நெருப்பையே அன்று அர்ச்சகர் பூசைக்கு எடுத்துக் கொண்டார். கூடியிருந்தவர்கள் பயபக்தியுடன் சுவாமிகளின் தெய்வீக சக்தியை உணர்ந்து வணங்கினார்கள். ராமச்சந்திரா மேத்தா, சுவாமிகளின் காலில் விழுந்து மன்னிப்புக் கோரினார். சுவாமிகளும் அவரிடம் ஒன்றுக்கும் பயப்பட வேண்டாம் என்று கூறிச் சிரித்தார்.

கொஞ்சகாலம் கழித்து ஒருநாள் பிரதோஷத்தன்று சுவாமிகள் ஸ்ரீ காந்திமதி அம்பாள் கோவில் உட்பிரகாரத்தைச் சுற்றிவரும்போது அங்கே அதிகமான விளக்குகள் மிகவும் பிரகாசமாய் எரிந்து கொண்டிருப்பதைக் கண்டு, கோவிலதிகாரிகள் இத்தனை விளக்குகளைப் போடுகின்றார்களா என்று வினவினார். அங்குள்ளவர்கள், இது கோவில் நிர்வாகத்தினர் ஏற்பாடு அல்ல என்றும், மணியம் சுப்பிரமணியபிள்ளை என்பவர், தனிப்பட்ட முறையில் பொதுமக்களிடம் நன்கொடை பெற்று இந்த கைங்கரியம் செய்திருக்கிறார் என்றும் தெரிவித்தார்கள். சுவாமிகள்

மகிழ்ச்சி அடைந்தார். அப்போது மணியம் வந்து சுவாமிகளை வணங்கி நிற்க, அவர்கள் மணியத்திற்குத் தமது பாராட்டுதலைத் தெரிவித்தார். சில நிமிடங்கள் கழித்து அவ் அதிகாரி சுவாமிகளின் பாதகமலங்களில் விழுந்து பணிந்து, திருவநந்தபுரத்தின் ஆலயத்தில் நடைபெறுவதுபோல் இந்தக் கோவிலிலும் தைத்சங்கராந்தியில் லட்சதீபம் நடத்தக் கிருபை செய்ய வேண்டுமென்று பிரார்த்தனை செய்தார். சுந்தர சுவாமிகளும் அதற்கு இணங்கினார். உடனே, தமது சீடர்களில் சதாசிவ தருவாடியார் முதலியோரிடம் அதைச் சொல்லி அதற்கு ஆவன செய்ய வேண்டுமென்று ஆணையிட்டார். லட்சதீபத் திருவிழா முறை என்ன என்று, இவ் விஷயங்களில் அநுபவம் பெற்ற ஐயா தீக்ஷிதர், மகாலிங்க தீக்ஷிதர் முதலியோரிடம் கலந்ததில், பதினோரு நாட்கள் மகாருத்ராபிஷேகம், வேத பாராயணம் முதலியவை களோடு, நானாவித வாத்திய கோஷத்துடன் ஸ்ரீபலி நாதரை எழுந்தருளுவித்தல், ஊஞ்சல் மண்டபக் கொலு, தீப பூஜை ஆகியவற்றை நடத்திப் பதினோராவது நாளிரவில் லட்ச தீபங்கள் ஏற்றி, இடபவாகனாரூடராய் சுவாமி எழுந்தருளுதல் சம்பிரதாயம் என நிர்ணயிக்கப் பெற்றது. சுந்தர சுவாமிகளின் ஆதரவில் கோவில் ஊஞ்சல் மண்டபத்தில் நெல்லைப் பிரமுகர்களின் கூட்டம் கூடி அந்த வருடமே திருவிழாவைத் தொடங்கி விட வேண்டுமென்றும், அதற்கு வேண்டிய சுமார் இருபதினாயிரம் ரூபாயை வசூலிக்க வேண்டுமென்றும் முடிவு செய்யப்பட்டது. பணவசூலும் பிறகாரியங்களும் வேகமாக சுவாமிகளின் தலைமையில் நடைபெற்றதில், வெள்ளி தீபம், தங்க தீபம், தங்க ரத்தினப் பதக்கம், திருவிழாவுக்குச் சிறப்பாக வாங்கப்பெற்று, முதல் தீப விழா - 1864ம் வருடத்தில் (கொல்லம் 1039ம் ஆண்டு தைமாசம் திங்கட்கிழமை,

அமாவாசை திருவோண நட்சத்திரமும் கூடிய அர்த்தோதய புண்ணிய காலத்தில்) மிகச்சிறப்பாக நடத்தப்பெற்றது. அன்றுமுதல் ஆறுவருடங்களுக்கொருமுறை இவ்விழா திருநெல்வேலி ஸ்ரீ காந்திமதி அம்பாள், நெல்லையப்பர் கோவிலில் இன்றுவரை நடைபெற்று வருகிறது.

லட்சதீபத் திருவிழா முடிந்தவுடன், சுந்தர சுவாமிகள் சங்கரமடத்தில் சில நாட்கள் தங்கினார். இக்காலத்தில் கொ. சிதம்பரம்பிள்ளை என்ற ஓர் அறிஞர் சுவாமிகளிடம் வந்து அடிபணிந்து சீடராக இருந்தார். பின்னர் அவர், சுவாமிகளிடம் முறையாக உபதேசம் கேட்டு, அனுகிரகமும் பெற்று, சமாதிநிலையில் கொஞ்ச நேரம் இருந்து விழித்து குருவை ஆனந்தக்கண்ணீருடன் வணங்கித் துதித்தார். இந்த சிதம்பரம்பிள்ளை பஜனை மடத்தை நடத்துவதின் பொறுப்பை ஏற்றுக் கொண்டார். இதனால், இவர் 'பஜனை சிதம்பரம் பிள்ளை' என்றே அழைக்கப்பட்டார். சுந்தர சுவாமிகளும் பஜனை மடத்தில் வந்து தங்கி, தமது சீடர்களுக்கு கடவுள்மீது பக்தி செலுத்துவதின் அவசியத்தை வற்புறுத்தி வந்தார்.

சுந்தர சுவாமிகள் பரம வைதீகக் குடும்பத்தில் பிறந்து அதற்குரிய சாத்திரங்களைக் கற்று வேதாந்தத் தெளிவு பெற்ற மகனாயிருந்த போதிலும், அவர் ஆசாரங்களைக் கைவிட்டு அதிவர்ணாஸ்ரமியாய் எல்லோருடனும் பழகினதாலும், ஆகார விஷயங்களில் சாதிக் கட்டுப்பாடுகளைத் துறந்தாலும், திருநெல்வேலியிலுள்ள வைதீகப் பிராமணர்களில் பலர் அவருடைய பெருமையைத் தெரியாமலும் மதிக்காமலும் இருந்தார்கள். இக்காலத்தில் சிருங்கேரி ஜகத்குரு சங்கராச்சாரியார். நரசிம்ம பாரதி VIII (1817-1878) சுவாமிகள், தமது இரண்டாவது தென்னிந்திய யாத்திரையின் போது நெல்லைக்கு விஜயம் செய்தார். அப்போது பலர் அவர்களை

தரிசித்து வணங்கினார்கள். ஜகத்குருவின் சுற்றுப் பிரயாணத்தில் நெல்லை விஜயத்தை ஏற்பாடு செய்த பிராமணர்கள், சுந்தர சுவாமிகளை அழைக்கவில்லை; அவரும் இதைப்பற்றிக் கவலைப்பட்டதாகத் தெரியவில்லை. ஆனால் ஜகத்குரு மகாசந்நிதானம் அவர்கள் சுந்தரசுவாமிகள் திருநெல்வேலியில் இருப்பதைத் தெரிந்து கொண்டு, அவரை அழைத்துவர தகுந்தவர்களை அனுப்பவே, சுந்தர சுவாமிகளும் வந்து மடாதிபதியை சந்தித்தார். சிருங்கேரி பீடாதிபதி, தாமே சுந்தரசுவாமிகளை வரவேற்று ஒரு ஆசனத்தில் இருத்தி அங்குக் கூடியிருந்தவர்களுக்கு, சுவாமிகள் ஓர் அவதார புருஷர் என்று கூறி, அவர்களுடைய பெருமையை எடுத்துரைத்தார். அதுமுதல் நெல்லை பிராமண சமூகத்தார் சுந்தரசுவாமிகளின் மகிமையை உணர்ந்து, அவரையும் மகாசந்நிதானம் என்றே அழைக்கத் தொடங்கி னார்கள்.

அப்புறம், சுந்தரசுவாமிகள் பொதிகை மலைக்குச் சென்று அங்கு சிலகாலம் தவம் செய்துகொண்டிருந்தார். மலையில் நித்தியவாசம் செய்து கொண்டிருப்பதாகக் கருதப்பெறும் அகத்திய முனிவருடன் சுவாமிகள் அளவளாவியதாகச் சொல்லப்படுகிறது. பின்னர், சுந்தரசுவாமிகள் நெல்லைக்கு வந்து, தாமிரவருணியின் கரையிலுள்ள குறுக்குத்துறை என்ற திருவுருமாமலையில் கொஞ்ச காலம் தங்கினார். நதியின் நடுவிலுள்ள சுப்பிரமணிய சுவாமி கோவிலுக்குச் சென்று வழிபடுவதும் உண்டு. இங்கே ஏராளமான பக்தர்கள் காத்திருந்து, சுவாமிகளை தரிசனம் செய்து, அவர்களிட மிருந்து ஆசிகள் பெறுவதுண்டு. அவரவர்கள் பக்குவத்திற்குத் தகுந்தபடி சுவாமிகள் உபதேசித்து கடவுளை வழிபடும் முறைகளை விளக்கினார். இக்காலத்தில் பாளையங் கோட்டைக்கு ஒரு மைல் வடக்கேயுள்ள திம்மராஜபுரத்தைச்

சேர்ந்த சிவசுவாமிகள் என்ற பிச்சு சுவாமிகள், சுந்தர சுவாமிகளைத் தரிசித்து அவருடைய அநுக்கிரகம் பெற்று கூடவே வசித்து வந்தார். சேரை செளந்திர பாண்டியம் பிள்ளை என்ற ஒரு பக்தர் சுவாமிகளிடம் சென்று அடிவணங்கி அவருடைய சீடரானார் குருவின் அநுக்கிரகத்தைப் பெற்று சமாதி நிலையை அடையும் பாக்கியத்தையும் பெற்றார். ஒரு தடவை சமாதியிலிருந்து எழுந்த செளந்திரபாண்டியம் பிள்ளையும் பிறரும் சுவாமிகளிடம், அவர்களுடைய அநுபவமும் உபதேசமும் உலகத்திற்குப் பயன்படுமாறு எழுத்து வடிவில் வரவேண்டு மென்று விண்ணப்பித்தார்கள். சுந்தர சுவாமிகளும் இதற்கு அன்புடன் இசைந்து, சொல்லிக்கொண்டே போக, சில சீடர்கள் கற்றுச் சொல்லிகளாய் எழுதினார்கள். இது பின்னர் ஸ்வாது பூதி ரஸாயனம் என்ற பெயரில் அச்சடிக்கப்பெற்று சதாசிவ தருவாடியாரால் பதிப்பிக்கப் பெற்று வெளிவந்தது. இதுதான் சுவாமிகளின் முதலாவது நூல்.

சுந்தர சுவாமிகள் குறுக்குத்துறையில் வாசம் செய்து கொண்டிருக்கும்போது யாத்திர மார்க்கமாய் வந்த புதுக்கோட்டையைச் சேர்ந்த ஒட்டுத்திண்ணை பரதேசி என்ற ஒரு துறவி சுவாமிகளை சந்தித்து வணங்கினார். அவர்களுடைய ஆன்மஞான முதிர்ச்சியையும் சமயப் பற்றையும் மக்கள்மீதுள்ள அன்பையும் பார்த்து வியந்த பரதேசி, சுவாமிகளைப் புதுக்கோட்டை பிரதேசத்திற்கு விஜயம் செய்யும்படி கேட்டுக்கொண்டார். சுவாமிகள் இசைந்து உடனடியாகப் புதுக்கோட்டைக்குப் புறப்பட்டுப் போனார். சேரை செளந்தர பாண்டியன் பிள்ளை மறுநாள் குறுக்குத்துறைக்கு சுவாமியைத் தரிசனம் செய்யப் போகும் போது அவர்கள் காணவில்லை. துக்க சாகரத்தில் வாழ்ந்த செளந்திர பாண்டியன்பிள்ளை தருவாடியார் இல்லத்திற்குப்

போய் விசாரித்ததில், உண்மை தெரியவே கணமேனும் தாமதிக்காமல், தாமும் தருவாடியாருடன் புதுக் கோட்டைக்குப் பிரயாணமானார். இதுவரை பெரும் பாலும் நெல்லைப் பிரதேசத்திலேயே வாழ்ந்து சீடர்களுக்கு அநுக்கிரகம் செய்துவந்த சுவாமிகள் தமிழ்நாடு முழுவதையுமே தமது சமயப்பணிக்குக் களன் ஆக்கிக் கொண்டார். எனினும், இவர் இக் காலம்முதல் திருநெல்வேலி கோடக நல்லூர் சுந்தரசுவாமிகள் என்றே அழைக்கப் பட்டார்.

ஒரு சமயம், திருநெல்வேலியில் இருக்கும்போது அவ்வூரில் பிரபல வக்கீலாயிருந்த ஏ. கிருஷ்ணசாமி அய்யர் சில நண்பர்களுடன் சுவாமிகளிடம் வந்து அவருடைய சக்தியைத் தங்களுக்கு நிரூபணம் செய்ய வேண்டுமென்று கேட்டார்கள். சுவாமிகள் அவர்களுக்குக் காசியில் மணிகர்ணிகா கட்டத்தில் சுந்தரசுவாமிகள் இருக்கிறாரா என்று கேட்கச் சொன்னார். அவர் அவ்வாறு தந்தி கொடுத்தபோது, காசியிலிருந்த நண்பர் சுந்தர சுவாமிகள் மணிகர்ணிகா கட்டத்தில் இருப்பதாகப் பதில் தந்தி அடித்தார். ஆனால் சுவாமிகள் திருநெல்வேலியில் இருப்பதைத் தெரிந்து கிருஷ்ணசாமி அய்யர், தம்முடைய நடத்தைக்கு வருந்தி, சுவாமிகளிடம் மன்னிப்பு கேட்கவே சுவாமிகள் சிரித்துவிட்டு அவர்களுக்கு அநுக்கிரகம் செய்தார்.

1. இந்தச் சம்பவம் சுவாமி ராமாநந்த பாரதியின் நூலில் விடப்பட்டிருக்கிறது. பிற நூல்களில் உள்ளவாறே இங்கு கொடுக்கப்பட்டிருக்கிறது.

# 7

# சுந்தர சுவாமிகள் நடத்திய முதல் கும்பாபிஷேகம்

சுந்தரசுவாமிகள் சுதேச சமஸ்தானமாயிருந்த புதுக்கோட்டையில் கொஞ்சகாலம் தங்கினார். அது நாட்டுக்கோட்டைச் செட்டியார்கள் என்ற தனவைசியர்கள் என்பவர்கள் வசிக்கும் பிரதேசத்தின் ஒரு பகுதியாயும் இருந்தது. அவ்வூரிலிருந்த சிறந்த வைதீக சீலரான ராமாசாஸ்திரிகள் சீடரானார். அவருடைய குடும்பத்தாரும் சுவாமிகளிடம் பக்தியுடன் நடந்து கொண்டார்கள்.

அப்பு நாயக்கர், சுப்பராய சிவன், ராம பாகவதர், ராமசாமி சாஸ்திரிகள் ஆகிய பிரமுகர்களின் வேண்டுகோளுக்கு இணங்கி சூதசம்ஹிதையை பஞ்சாகமாக நடத்த ஒப்புக் கொண்டார். ஒரு பெரிய மண்டபத்தில் போடப்பெற்ற உயர்ந்த ஆசனத்தில் அமர்ந்து, தமது பிரவசனத்தைச் செய்தார். அறிஞர்களும் மக்களும் பெருந்திரளாய்க் கூடியிருந்தார்கள். சுவாமிகள், எல்லோரும் ஞானத்திற் குரியவர்கள் என்ற கருத்தைக் கொண்டவராதலால், வேதங்கள் உபநிடதங்கள் முதலியவைகளிலிருந்து மேற்கோள்களை எடுத்துக்கூறி, தமது அமுதவாக்கைப் பொழிந்து கொண்டிருந்தார்.

கூட்டத்திலிருந்த சில வைதீகப் பிராமணர்கள், ஸ்தீரிகளும், பிராமணரல்லாதாரும், வேதங்கள்,

உபநிடதங்கள் முதலியவைகளைக் கற்று ஞானமார்க்கத்தைக் கொள்ள அருகதையற்றவர்கள் என்று சாத்திரங்கள் கூறியிருக்க, இந்த சுவாமிகள் எல்லோரும் கூடியிருக்கும் கூட்டத்தில் இதுமாதிரிப் பிரவசனம் செய்யலாமோ என்று தங்கள் சந்தேகத்தைத் தெரிவித்தார்கள். சுந்தர சுவாமிகள் ஈசுவரனின் கருணையால் எல்லோருக்கும் ஞானம் கிட்டும் என்ற கருத்தைப் பறைசாற்றியதால் இவ்வித சந்தேகத்தைக் கிளப்பினார்கள். இது சுவாமிகள் காதில் விழவே, அவர் இந்த சந்தேகத்தை இறைவனே இங்கு தீர்த்துவைப்பார் என்று பதில் அளித்தார். அந்த சமயம் ராமாசாஸ்திரிகள் தமது ஐந்து வயதுள்ள பெண்ணுடன் சுவாமிகளை பிக்ஷைக்கு அழைக்க அங்கே வந்தார். சுவாமிகள் அந்தப் பெண்ணைக் கூப்பிட்டு, தன் கையால் பிடித்துக்கொண்டு, 'உனக்கு என்ன வேண்டும் குழந்தாய்' என்று கேட்டார். குழந்தை 'எனக்கு பெரியோர் களை வணங்கி ஞானம் பெறவேண்டும்' என்று எல்லோரும் பிரமிக்கும்படிக்கு பதிலுரைத்தாள். சுவாமிகள் அவளுக்கு திருநீறு பூசி, காதில் சில மந்திரங்களைச் சொன்னார். தகப்பனாரும் மகளும் வீட்டுக்குத் திரும்பினார்கள். உடனே ஐந்து வயதுப் பெண் நிஷ்டையில் அமர்ந்து சமாதிநிலையை அடைந்தாள். பெற்றோர்கள் சற்றுப் பயந்த போதிலும் சுவாமிகளிடம் பூரண நம்பிக்கை இருந்ததால், குழந்தையைப் பார்த்துக் கொண்டே ஒன்றும் சொல்லாமல் சஞ்சலத்துடன் இருந்தார்கள். சந்தேகத்தைக் கிளப்பியவர்கள், தெளிவு பெற்று சுவாமிகளை வணங்கினார்கள். சில மணி நேரங்கள் கழித்து, சுவாமிகள் வந்து குழந்தையைத் தடவி உணர்வை வரச் செய்ததும், அவள் நினைவு பெற்று ஒன்றும் நடக்காதது போல் எழுந்து வழக்கம் போல் பேசத் தொடங்கினாள். சாதாரண நிலைமையையும் அடைந்தாள். இது முதல்நாள் நடந்த நிகழ்ச்சி.

மறுநாள் சூதசம்ஹிதை படனம் தொடங்கினவுடன், ராமசாமி சாஸ்திரிகள் என்பவரின் வண்டிக்காரனான ரங்கக் கோன் சுவாமிகளின் அநுக்கிரகத்திற்குப் பாத்திரமானான். அவர்கள் சொல்லும் மொழிகளைக் கேட்டு மகிழ்ந்து ஆனந்தக் கூத்தாடினான். ராமசாமி சாஸ்திரிகள், இதை பிரவசனத்திற்கு ஒரு தடையாகக் கருதி, அவனைக்கூப்பிட்டு 'ரங்கா ஏன் இப்படி ஆடுகிறாய்? என்று அதட்ட, அவன் "நான் பிரம்மஸ்வரூபம் என்று உணர்கிறேன்' என்று மகாவாக்கியங் களின் தாத்பரியத்தைக்கூறி, ஆனந்த நிலையில் ஆடிக் கொண்டிருந்தான். கூட்டத்தில் இருந்தவர்கள் முதலில் திகைப்படைந்த போதிலும், இது சுவாமிகளின் திருவிளையாடல் என்று தெளிந்து மகிழ்ந்தார்கள். முந்தின நாள் சந்தேகத்தைக் கிளப்பிய வைதிகப் பிராமணர்கள் தங்களுடைய தவறை உணர்ந்து, சுவாமிகளின் பாதங்களில் விழுந்து அவர்களின் அருள் வலிமையைப் பாராட்டிப் புகழ்ந்தார்கள். சுவாமிகளும் கருணைகாட்டி அவர்களை ஆசீர்வதித்தார்கள். சூதசம்ஹிதை படனம் வெகுசிறப்பாக முடிந்தது. சுந்தரசுவாமிகள், தமது சொந்த வாழ்க்கையில் எவ்வித பேதமுமின்றி எல்லோருடன் பழகியதுடன், பக்தியினாலும் ஞானத்தினாலும் உய்யும் மார்க்கம் எல்லோருக்கும் உரியது என்ற கொள்கையை நிலைநாட்டி செயலிலும் காட்டினார். இதனால் அவர்களுடைய புகழ் முன்னிலும் பன்மடங்கு அதிகமாயிற்று. வைதிகப் பிராமணர்கள் சற்று மனக்கசப்புடன் இருந்தாலும் அதை வெளிக்காட்டவில்லை. மற்றவர்கள் சாரிசாரியாக புதுக்கோட்டைக்கு வந்து அவரை வணங்கிப் போனார்கள்.

அக்காலத்தில் புதுக்கோட்டை சீமையைச் சேர்ந்த அரிமளம் சிவராமன் செட்டியாரும், புதுவயல் அழகப்ப செட்டியாரும் புதுக்கோட்டைக்கு வந்து, சுவாமிகளை வணங்கி அவர்களின் சீடரானார்கள். பின்னர் அடிக்கடி

புதுக்கோட்டைக்கு வந்து சுவாமிகளை தரிசித்துப் போனார்கள். ஒரு நாள் தஞ்சையைச் சேர்ந்த ஒரு வியாபாரி, கலைநயங்களமைந்த அழகான பெரிய நடராஜர் ஓவியத்தைக் கொண்டுவந்து சுவாமிகளிடம் காட்டினார். சுவாமிகள் மகிழ்ந்து அது பூஜைக்குரியது என்று கருதி, வியாபாரியிடம் விலையைக் கேட்டார். உடனே சிவராமன் செட்டியார் அதை வாங்கி சுவாமிகளின் பாதத்தில் காணிக்கையாக வைத்தார். சில நாட்கள் கழித்து, சுந்தரசுவாமிகள், தமது சீடர்களுடனும் நடராஜர் ஓவியத்துடனும் நெல்லைக்கு வந்தார். படம் பஜனை மடத்தில் பூஜைக்கும் வழிபாட்டுக்கும் வைக்கப்பட்டது. பஜனை சிதம்பரம் பிள்ளை மகிழ்ச்சி அடைந்து, அதிக ஊக்கத்துடன் பஜனை மடத்தை நடத்தி வந்தார். மக்கள் சுவாமிகளின் சிவபக்தியையும் கலையுணர்ச்சியையும், ஜனங்கள் மீதுள்ள அன்பையும் பாராட்டி வியந்தார்கள்.

பின்னர், சுந்தர சுவாமிகள் தம்து சீடர்களுடன் வடஜில்லாக்களில் யாத்திரை செய்து, பல சிவாலயங்களை தரிசனம் செய்துவிட்டு மீண்டும் புதுக்கோட்டைக்கு வந்து தங்கினார். இச்சமயம் சேஷப்பா என்ற படித்த பிராமணர் ஒருவர் சுவாமிகளிடம் வந்து, "ஐயா, தாங்கள் எளிதில் எதையும் நம்பும் மக்களை ஏமாற்றி ஜால வித்தைகள் செய்து வருகின்றீர்கள். இவற்றை நிறுத்தி விட வேண்டும். அப்படிச் செய்யவில்லையானால் தங்களுடைய சக்தியை தக்க முறையில் நிரூபணம் செய்ய வேண்டும்" என்று ஆத்திரத்துடன் சவால் விடுபவர் போல் பேசினார். சுவாமிகள் சற்றேனுங் கோபங்கொள்ளாமல், இளநகையை வருவித்துக் கொண்டு, அப்பகுத்தறிவாளர் செய்த பூர்வஜன்ம புண்ணியத்தால், அவருக்கு கடாக்ஷதீக்ஷையை அருளவே, அவர் பிரக்ஞையற்று விழுந்து கிடந்தார். எல்லோரும்

பயபக்தியுடன் இதைக் கவனித்து சுவாமிகளின் தெய்வீகத்தை உணர்ந்து மகிழ்ந்தார்கள். கொஞ்ச நேரங் கழித்து சேஷப்பா கண்விழித்து எழுந்து, ஆனந்தத்துடன் சுவாமிகளின் பாதத்தில் விழுந்து, தமது செயலுக்கு வருந்தி மன்னிப்புக் கேட்டுச் சென்றார். இதுபோன்று நெல்லையில் நடந்த மற்றொரு சம்பவம் முன்னர்க் கூறப் பெற்றிருக்கிறது. சுவாமிகள் புதுக்கோட்டையில் சூதசம்ஹிதை படனம் மறுபடியும் நடத்தினார்.

அப்புறம், சுந்தர சுவாமிகள் சிதம்பரம் போய், அங்கே கோவில் கொண்டு எழுந்தருளியிருக்கும் சிவகாமி அம்மை சமேதராக உள்ள நடராஜப் பெருமானை தரிசித்துக் கொண்டு சில நாட்கள் தங்கினார். அவர் அந்த ஆலய விஷயங்களைப் பற்றி விசாரித்துத் தெரிந்து கொண்டு, முத்தக்காப்பட் டி ஜமீந்தாரிணியின் பண உதவிகொண்டு அம்பாளுக்கு ஒரு தேர் செய்து சமர்ப்பித்தார். தில்லையிலிருந்து திருவண்ணாமலைக்குப் போய், தமது சீடர்களுடன் கிரிபிரதக்ஷணம் செய்து அருணாசலேஸ்வரரை வணங்கினார். பிரதக்ஷணம் செய்யும்போது, அத் திருமலை, ஜோதி மலையாய் தமது சீடர்களுக்கு காட்சியளிக்கும்படி அருள் செய்து, அவர்களை ஆச்சரியத்தில் மூழ்கடித்தார். பல சிவக்ஷேத்திரங்களையும் தரிசனம் செய்துவிட்டு திருநெல் வேலிக்கு திரும்பினார். அங்கே பஜனைமடத்தில் தங்கித் தருவாடியார், காந்திமதிநாதபிள்ளை முதலிய சீடர்களுக்கு உபதேசம் செய்து கொண்டிருந்தார். இக் காலத்தில் சுவாமிகள் திருவாய் மலர்ந்தருளிய போதனைகள் ஸ்வாநுபவரஸ மஞ்சரி என்ற பெயரில் ஒரு நூலாக வெளிவந்தது. இதையும் தருவாடியாரே பதிப்பித்து வெளியிட்டார்.

சில நாட்கள் கழித்து, சுந்தர சுவாமிகள் ராமேஸ்வரத்திற்கு யாத்திரை போகத் திட்டமிட்டு, தமது சீடர்களுடன்

புதுக்கோட்டைக்கு வந்தார். அங்கிருந்து புறப்பட்டு, திருப்பத்தூரில் ஒருநாள் தங்கினார். அன்று மாலை சுவாமிகள் ராமசிவன் என்பவரைக் கோவிலுக்குப் போய், இரவு உணவுக்கு மடப்பளியிலிருந்து ஏழுகட்டி சாதம் வாங்கி வரும்படி அனுப்பித்தார். அவர் கோவிலுக்குப் போய்க் கேட்கவே மடப்பள்ளி பரிசாரகர்“இப்போது வெறும் அன்னம்தான் கிடைக்கும். அர்த்தஜாமத்திற்குப் பிறகு ஐந்துவகை பிரசாதமும் வாங்கலாம்.” என்று பதிலுரைத்தார். ராமசாமி சிவன் அப்புறம் வந்து பிரசாதங்களை வாங்கிக் கொள்ளலாம் என்று நினைத்துத் திரும்பி விட்டார். சுவாமிகளின் வரவைத் தெரிந்த மக்கள் ஏராளமாகக் கூடிவிடவே, அவர்கள் சூதசம்ஹிதையைப்பற்றி உற்சாகத்துடன் பேச ஆரம்பித்து விட்டார்கள். பொழுது போனதே ஒருவருக்கும் தெரியவில்லை. சொற்பொழிவு முடியும்போது நள்ளிரவு 1 மணியாகி விட்டது. ராமசிவன் ஓடோடியும் கோவிலுக்குப் போனார், உணவுப் பட்டைகளை வாங்க. கோவில் கதவுகள் மூடப்பட்டிருந்தன. ஏமாற்றத்துடன், தமது மெத்தனத்திற்கு வருந்தி வெறுங்கையுடன் திரும்பினார். சுவாமிகளுள்பட எல்லோரும் அன்றிரவு பட்டினிதான் என்று கருதி உறங்க ஆயத்தம் செய்து கொண்டிருந்தார்கள்.

அப்போது சுவாமிகள் இருக்குமிடத்திற்கு, கோவில் பரிசாரகர்போல் ஒருவர் வந்து, ‘திருநெல்வேலியிலிருந்து வந்த பிராமணர் எங்கே? உணவு வேண்டுமென்றால் அது கிடைக்குமிடத்தில் காலாகாலத்தில் போய்வாங்கிக் கொள்ளக் கூடாதோ? உணவு அவர்களை நாடி வருமா என்ன?” என்று சொன்னார். வந்தவருடன், ராமசிவன் உணவை வாங்கிக்கொண்டுவரச் சென்றார். பரிசாரகர் தட்டக் கோவில் கதவு திறந்தது; மடப்பள்ளிக்குள்

சென்றார்கள். பரிசாரகர் ராமசிவனைப் பார்த்து, "ஏழு பிரசாதப் பட்டைகளை வைத்திருந்தேன். ஒன்று காணவில்லை. எலியோ பூனையோ தின்றுவிட்டது. ஆறு பட்டைகள் இருக்கின்றன. எடுத்துச் செல்லுங்கள்" என்று கூறவே சிவனும் அவற்றை எடுத்துக்கொண்டார். இருவரும் வெளியே வரும்போது கோவில் கதவுகள் தாமே மூடிக்கொண்டன. சிவனுடன் வந்த கோவில் பரிசாரகர் மறைந்துவிட்டார். ராமசிவன் அங்குமிங்கும் அவரைத் தேடிப்பார்த்தும் கண்டுபிடிக்க முடியவில்லை. ராமசிவன் ஒன்றும் செய்யத் தெரியாமல் ஸ்தம்பித்துப் பித்துப் பிடித்தவர்போல் நின்று கொண்டிருந்தார். பட்டினி கிடக்கும் சுவாமிகளுக்கும் மற்றவர்களுக்கும் ஓடிப்போய் உணவு கொடுக்க வேண்டும் என்ற உணர்வே யில்லாமல் தவித்துக் கொண்டிருந்தார். சுவாமிகள், போனவர் வரவில்லையே என்று கருதி, ஆவுடையப்பிள்ளை என்பவரைக் கோவிலுக்கு அனுப்பித்தார். அவர் சென்று திகைத்துக் கொண்டிருக்கும் ராமசிவனைக் கூட்டிக்கொண்டு வரவே, சிவன் சுவாமி களிடம் நடத்தைக் கூறினார். சுவாமிகள், பரிசாரகர் வேடத்தில் வந்தவர் பரமசிவனே என்று உணர்ந்து, ஈசனின் கருணையைப் பாராட்டி, நெஞ்சுருகத் தோத்திரம் செய்தார், கொண்டு வரப்பட்ட பிரசாதத்தை எல்லோரும் சாப்பிட்டார்கள்.

மறுநாள், சுவாமிகள் அவ்வூரிலேயே தங்கி ஆலயத்திற்குச் சென்று அபிஷேகம் அர்ச்சனை முதலியவைகளைச் செய்யச்சொல்லி ஈசனை வணங்கினார். "சேதுவிற்குப் போன பலன் இங்கேயே கிட்டிவிட்டது" என்று சொல்லிக்கொண்டு, சுவாமிகள், தமது சீடர்களுடன் புதுக்கோட்டைக்கே திரும்பி விட்டார்கள். கொஞ்ச நாட்கள் சென்றபின், சுந்தர சுவாமிகள் ராமேஸ்வரம் போகத் திட்டமிட்டு, அரிமளம் சிவராமன்



செட்டியாருடனும், மற்ற சீடர்களுடனும் இரண்டு மாட்டு வண்டிகளில் ஒருநாள் புறப்பட்டார்கள். சுவாமிகள் ஒரு வண்டிக்குள் இருந்தார்கள். வண்டிகள் திருமயத்தை அடைவதற்கு முன்னால், சுவாமிகளைப் போன்று ஒருவர் போர்வையைப் போர்த்திக்கொண்டு வண்டிக்காரர்கள் முன் நின்று வண்டிகளைப் புதுக்கோட்டைக்கு திருப்பி விடும்படி ஆணையிட்டார். அவர்களும் அவ்வாறே செய்தார்கள். கொஞ்ச நேரங் கழித்து வண்டிக்குள்ளிருந்த சுவாமிகள், 'எங்கே போய்க் கொண்டிருக்கிறோம்?'' என்று கேட்க, வண்டிக்காரர்கள் அவர்கள் கொடுத்த உத்தரவுப்படி புதுக்கோட்டைக்குப் போய்க் கொண்டிருப்பதாயும், ஊர் இன்னும் ஐந்து மைல்கள் தொலைவில் இருக்கிறதாயும் பதிலுரைத்தார்கள். சுவாமிகள் ஆச்சரியமடைந்து, தாம் வண்டியிலிருந்து கீழே இறங்கவோ, வண்டிக்காரர்களைப் புதுக்கோட்டைக்குப் போகச்சொல்லவோ இல்லை என்று கூறி சிந்தனையில் ஆழ்ந்தார். வண்டிகள் எந்த இடத்திலிருந்து திருப்பப் பட்டனவோ அதிலிருந்து கொஞ்ச தூரத்திற்கப்பால் கடும் புயல் வீசிப் பெரும் சேதத்தை விளைவித்ததாகப் பின்னர் எல்லோருக்கும் தெரியவந்தது. வண்டிகள் திரும்பாமல் போயிருந்தால் இந்தப் புயலுக்குள் அகப் பட்டிருக்கும். சுவாமிகள்போல் வேடம் போட்டுக் கொண்டு வண்டிக்காரர்களுக்கு உத்தரவு போட்டது யார்? பரமசிவனே தான் என்று உணர்ந்து, சுவாமிகள், அப் பரம்பொருளின் கருணையே வியந்து, வியந்து போற்றினார். சீடர்களும் மக்களும் தங்கள் மத்தியில் கடவுளே சுவாமிகள் உருவில் வந்திருப்பதாக உணர்ந்து பெருமிதம் கொண்டார்கள். ஆனால் சுந்தர சுவாமிகளுக்கு இரண்டு தடவைகளிலும் ராமேஸ்வர யாத்திரை கிட்டவில்லை. இதில் ஏதோ ஒரு மர்மம் இருக்க வேண்டும் என்று கருதப்பெற்றது.

சுந்தர சுவாமிகளின் கவனம் வேறு விஷயங்களில் சென்று கொண்டிருந்தது. சைவம் ஓங்கி, அதைச் சேர்ந்த நன்மக்களின் சமயவாழ்வும் பயனுள்ள முறையில் அமையவேண்டு மானால் அவர்கள் அன்றாடம் வழிபடும் ஆலயங்கள் புனிதமாக்கப்பட வேண்டும் என்று எண்ணம் சுவாமிகளின் மனத்தில் உதித்தது. பலகாரணங்களால் சிவாலயங்களின் புனிதத்தன்மை குறைந்து, அவற்றின் நிர்வாகத்திலும் குறைகள் தோன்றியிருந்தன. நாடு அந்நியர் ஆட்சியில் இருந்தது ஒருகாரணம் என்று முன்னர்க் கூறியிருக்கிறோம். ஆலய வழிபாட்டின் துணையின்றிச் சில தனிநபர்கள் மாணஸிகமாகக் கடவுளை வணங்கி ஞானத்தால் அவன் அருளைப் பெற்றபோதிலும், வேறு சிலர், சிவபூஜை, தீட்சை முதகலிய கிரியைகளின் மூலமும் அவன் தாள்களை அடையக் கூடுமானாலும், சாதரண மக்களுக்கு அவை எட்டாத வழிகள். அவர்கள்மீது சுந்தரசுவாமிகளுக்கு அளவற்ற கருணை இருந்தது. அவர்களுக்குகந்தது ஆலய வழிபாடும், தோத்திரமும், பஜனையும் சேர்ந்த பாதையே. ஆகையால் சுவாமிகள் இதில் கவனம் செலுத்தினார். ஆலயங்களால் மக்கள் அதிக நன்மை பெற வேண்டுமானால், அரை தூய்மையையாக்கப் பெற்று அவைகளில் ஈஸ்வர சாந்நித்யத்தை அதிகப்படுத்த வேண்டும். இதற்கு நல்ல முறையில் லோகோக்தமாக அஷ்டபந்தன கும்பாபி ஷேகங்களை நடத்துவதுதான் வழி என்று சுவாமிகள் நினைத்து, அதில் அக்கறை காட்டி மக்களை ஊக்குவித்து ஈடுபட்டார்.

சிவராமன் செட்டியார் சுந்தர சுவாமிகளைத் தமது ஊராகிய அரிமளத்திற்கு அழைத்துச் சென்றார். சுவாமிகளும் அங்குக் கொஞ்சகாலம் தங்கினார். அவ்வூர் ஸ்ரீ மீனாட்சி சுந்தரேஸ்வரர் ஆலயம் ஜீரணமாயிருப்பதைக்கண்ட

சுவாமிகள், சிந்தனைசெய்து ஒரு திட்டத்தை தமது மனத்தில் உருவாக்கிக் கொண்டார். அவ்வூர்ப் பிரமுகர்களை அழைத்து, ஆலயத்தைப் பழுதுபார்த்து, கும்பாபிஷேகம் நடத்துவது அவசியம் என்று கூறவே அவர்களும் அதற்கு இசைந்து ஆவன செய்ய ஒப்புக் கொண்டார்கள். எல்லோரும் சுந்தர சுவாமிகளின் தலைமையில், தங்களுக்கிடப்பட்ட பணியைச் செவ்வனே செய்தார்கள். அஷ்டபந்தன கும்பாபிஷேகம் வெகு சிறப்பாக நடைபெற்றது. சுவாமிகள் தமது வாழ்நாளில் நடத்திய 22 ஆலய கும்பாபிஷேகங்களில் இதுதான் முதலாவது. சுவாமிகளின் முக்கிய சீடர்களில் ஒருவரான சிவராமன் செட்டியாரின் ஊரான் அரிமளத்திற்கு இந்தப் பெருமை கிடைத்தது பொருத்தமே. சுவாமிகள் இறுதியில் சித்தியடைந்ததும் அரிமளத்தில்தான் என்பதையும் நாம் மறந்துவிடக் கூடாது.

அரிமளத்திற்கு இன்னொரு அரிய பணியையும் சுவாமிகள் ஆற்றினார்கள். அவ்வூரில், யாத்திரிகர்களோ, பிற ஊர்களிலிருந்து வந்தவர்களோ தங்குவதற்கு சத்திரம் போன்ற ஒரு பொதுவான இடம் இல்லாதது ஒரு பெரிய குறை. இருந்த ஒரு சத்திரமும் பாழடைந்து மூடப்பட்டிருந்தது. சுவாமிகள் அவ்வூர் வாசிகளுக்கு இந்தக் குறையைப்போக்க சத்திரத்தைக் கட்டும்படி ஆலோசனை கூறினார். கோவில் கும்பாபி ஷேகத்திற்கு ஒத்துழைத்த மக்கள், இது விஷயமாய் அக்கறை காட்டவில்லை. சுவாமிகள், சத்திரம் கட்ட நடவடிக்கைகள் எடுக்கும்வரை தாம் உண்ணா விரதம் இருக்கப் போவதாகக் கூறி பட்டினி கிடக்க ஆரம்பித்தார். இவ்வித மாக மகானுக்குப் பிழை செய்தோமே என்று வருந்திய ஊர்வாசிகள் கூடி சத்திரம் கட்டத் தீர்மானித்ததுமன்றி, தாமதமின்றிச் செயலிலும் இறங்கினார்கள். சுவாமிகள் திருப்தி அடைந்து உண்ணா விரதத்தை முடித்துக்

கொண்டார். இந்த நிகழ்சியில் அவர் பிற்காலத்தவர்களுக்கு ஒரு முன்னோடியாயிருந்தது கவனிக்கத் தக்கது.

அரிமளம் சிவாலய கும்பாபிஷேகத்திற்கு வந்திருந்து சிறப்பித்தவர்களில் கோவிலூர் சிதம்பரய்யா என்பவர் ஒரு முக்கியமானவர். அவர் நல்ல அறிவாளி; பண்பாடு மிகுந்தவர்; கோவிலூர் வேதாந்த மடத்தின் தலைவரா யிருந்தவர். அவர் சுந்தர சுவாமிகளிடம் பக்தியும் ஈடுபாடும் கொண்டவர். சுவாமிகளை கோவிலூருக்கு அழைத்துச் சென்றார். அங்கே இருந்து கொண்டு சுவாமிகள் செட்டிமார் நாட்டில் பல ஊர்களுக்குச் சென்று மக்களிடம் செய்த சைவ சமயப் பிரசாரத்தாலும் வேதாந்த ஞானோப தேசத்தாலும் தனவைசியர் சமுதாயத்திலேயே ஒரு புதிய திருப்பம் ஏற்பட்டது என்று கூறலாம். சைவ சமயத்தில் ஏற்கனவே ஓரளவு உணர்ச்சியுடன் ஈடுபட்டிருந்த மக்களின் சிவபக்தி வலிமையடைந்தது. இக் காலத்தில் சுவாமிகள் சிவ சின்னங்களாகிய திருநீறு, ருத்திராக்ஷம் ஆகியவற்றின் தத்துவத்தையும், மகிமையையும் திரு ஐந்தெழுத்தாகிய பஞ்சாக்ஷரத்தின் சக்தியையும் வெகுவாக எடுத்துரைத் தார்கள். எங்கு பார்த்தாலும் மக்கள் திருநீறுடனும் ருத்ராக்ஷத்துடனும் காணப்பெற்றார்கள் ‘‘ஏகருத்ராக்ஷ தாரணம் செய்துகொள்ளும் வழக்கத்தை தமிழ்நாட்டில் நிலைக்கச் செய்தவர் சுந்தரசுவாமிகள்’’ என்கிறார் டாக்டர் உ.வே. சாமிநாதையர்.

செட்டிமார் நாட்டுச் சுற்றுப் பிரயாணத்தை முடித்துக் கொண்டு சுந்தர சுவாமிகள் தமது சீடர்களுடன் திருநெல்வேலிக்குத் திரும்பினார். அங்கே, ஸ்ரீ காந்திமதி அம்பாள் சமேதரான ஸ்ரீ நெல்லையப்பர் கோவிலில் இரண்டாவது லட்சதீபம் **1870**-ல் நடத்த வேண்டியதற்கு ஏற்பாடுகள் சுவாமிகளின் தலைமையில் நடைபெற்றன.

இந்தப் பணியில் அவருடைய சிறந்த சீடர்களான நாராயண சிவம், ரங்கநாத சிவம் மிகுந்த ஊக்கத்துடன் ஈடுபட்டார்கள். பாலகிருஷ்ணகனபாடிகள், முத்துகனபாடிகள் ஆகியோரின் ஒத்துழைப்புடன் இரண்டாவது லட்சதீபம் அவ்வருடம் தை அமாவாசையன்று விமரிசையாக நிகழ்ந்தது.

சுந்தர சுவாமிகள் அதற்கப்புறம் சிலகாலம் பஜனை மடத்தில் தங்கியிருந்தார்கள். அப்போது பல சீடர்கள் வந்து சூதசம்ஹிதையின் ஒரு பகுதியாகிய பிரம்ம கீதைக்குத் தமிழாக்கம் செய்ய வேண்டும் என்று சுவாமிகளைக் கேட்டுக் கொண்டார்கள். சுவாமிகளும் இசைந்து சுலோகங் களுக்குப் பொருளும் விளக்கமும் சொல்லச் சொல்லச் சொக்கலிங்கம் பிள்ளை அவர்கள் எழுதிக் கொண்டார். மூன்று அத்தியாயங்கள் முடிவு பெறப் போகும் சமயம், கல்லத்தி முடுக்குத் தெருவிலிருந்த பிரபல வேதாந்தியும், சுவாமிகளின் சீடருமான ஐயா சாமிப்பிள்ளை அங்கு வந்தார். அவர் பிரம்மகீதைக்கு ஏற்கனவே, தத்துவராயரின் தமிழ்ப் பெயர்ப்பு இருக்கிறது என்று கூறித் தம்மிடமிருந்த ஏட்டைக் கொண்டு வந்து கொடுத்தார். ஒப்பிட்டுப் பார்த்ததில் மொழி பெயர்ப்புப் பொருள் ஒரே மாதிரியா யிருந்தது. ஐயா சாமிப்பிள்ளையின் ஆலோசனையின் பேரில் தத்துவராயரின் செய்யுள் மொழிபெயர்ப்புக்கு சுவாமிகள் விசேஷ உரை சொல்லிக் கொண்டு போனார்கள். முழுவதையும் சொக்கலிங்கம்பிள்ளை எழுதிக் கொண்டார். இது பிரஜோற்பத்தி வருடம் மார்கழி மாதம் (1871டிசம்பர்) சுவாமிகளின் சீடர்களில் தலைசிறந்து பெருங்கீர்த்தி பெற்றவர்களான சங்கீத வித்துவான் மகாவைத்திய நாதய்யராலும், அவருடைய மூத்த சகோதரரும் தமிழ்ப் புலவராய் இருந்து பெரியபுராணம் முழுவதையம் கீர்த்தனை ரூபமாக ஆக்கியவருமான வையை ராமசாமி அய்யராலும்,

தத்துவராயரின் மூலத்துடன் பதிப்பிக்கப்பெற்று, சென்னையில் அச்சிடப்பட்டு வெளி வந்தது. இதிலிருந்து மகா வைத்தியநாத அய்யரும் அவருடைய மூத்த சகோதரரும் தஞ்சாவூரில் சுவாமிகள் கும்பாபிஷேகங்கள் நடத்துவதற்கு முன்பே அவர்களுடைய சீடர்களாயிருந்தார்கள் என்று தெரிகிறது.[1]

திருநெல்வேலியில் ஸ்ரீ காந்திமதி அம்மன் ஆலயத்தில் இரண்டாவது லட்சதீபம் முடிந்த சில மாதங்களில் சுந்தரசுவாமிகள், தமது சீடர்களுடன் வடஜில்லாக்களில் சுற்றுப்பிராயணம் செய்யத் தீர்மானித்துப் புறப்பட்டு மதுரையை அடைந்தார். அங்கே விபூதி மடத்தில் தங்கினார். இங்கே எதிர்பாராத முறையில் ஒரு அற்புத நிகழ்ச்சி நடைபெற்றது.

சுவாமிகளின் சீடரும் யோகமார்க்கத்தில் ஓரளவு பக்குவமடைந்திருந்தவருமான நாராயணசிவன் கோவில் பொற்றாமரைக்குளத்தில் யோக நிஷ்டையில் அமர்ந் திருந்தார். யானைக்கும் அடி சருக்கும் என்ற முது மொழிக் கொப்ப ஏதோ தவறு ஏற்பட்டு நாராயண சிவனின் தேகம் நீருள் மூழ்கியது. இதை அறிந்த சுப்பிரமணியக் குருக்கள் என்பவர் போலீஸாருக்கு தகவல் கொடுத்தார். அவர்கள் வந்து குளத்தில் நாராயணசிவனின் உடலைத் தேடினார்கள். அது அகப்படவில்லை. மூன்றாம்நாள் உடல் நீரின்மேல் மிதந்தது. போலிஸார் மீண்டும் வந்து அதை வெளியே எடுக்க ஏற்பாடு செய்து கொண்டிருந்தார்கள். இச் சமயம் சுந்தரசுவாமிகள் அங்கே பிரசன்னமாகி அவ்வுடலை குளத்தின் தென்கரையிலுள் விபூதி விநாயகர் கோவிலில்

1. திருவையாறு சப்தஸ்தான கும்பாபிஷேக சமயத்தில்தான் இவர்கள் சுவாமிகளைப் பார்த்தார்கள் என்று முந்திய நூல்களில் கூறப்பெற்றது. இக் கும்பாபிஷேகங்கள் 1872-ல் நடைபெற்றன.

வைக்கும்படி கேட்டுக்கொண்டார். கோவில் அதிகாரிகளும் போலிஸாரும் மூன்று நாளுக்குமுன் இறந்தவரை இவர் என்ன செய்ய முடியும். என்று சந்தேகித்து அலட்சியமாகப் பேசினார்கள். பெருங்கூட்டம் கூடிவிட்டது. அதிலிருந்த சிலர், சுவாமிகள் சொன்னபடி செய்வதில் ஒருவருக்கும் நஷ்டம் இல்லை என்றும், நல்விளைவு ஒன்றும் நிகழாவிட்டால் போலிஸார் தங்கள் கடமையைப் பின்னர் செய்து கொள்ளலாம் என்றும் வாதாடினார்கள். அதிகாரிகளும் இசைந்து, தேகத்தைப் பிள்ளையார் கோவிலில் கொண்டு வைத்தார்கள். சுவாமிகள் திருநீற்றை உடலில் தடவி நாராயண சிவனின் காதில் மந்திரப் பிரயோகம் செய்யவே நாராயணசிவன் உயிருடன் எழுந்து சுந்தரசுவாமிகளின் பாதங்களில் விழுந்தார். மதுரைவாசிகள் ஆச்சரியத்தில் திகைத்தார்கள். எங்கு பார்த்தாலும் சுந்தர சுவாமிகள் செய்த அற்புதம்தான் பேச்சு.[1]

இன்று பலர் இதை நம்பாமல் இருக்கலாம்; மாண்டவர் மீள முடியுமா என்று நியாயமாகவே சந்தேகப்படலாம். ஆனால், இப்படி ஒரு அற்புதம் நடந்திருக்கவே முடியாது என்றும், அதை நம்புகிறவர்கள் பகுத்தறிவற்றவர்கள் என்றும் கூறுவது மிகையாகும். மனிதனின் தெய்வீக சக்தியின் ஆற்றலுக்கு எல்லை கிடையாது. தேவாரம் பாடிய மூவரான திருஞானசம்பந்தர், அப்பர், சுந்தரர் ஆகியோர்களில் ஒவ்வொருவரும் இறந்துபோனவர்களை உயிருடன் கொண்டு வந்ததாகப் பெரிய புராணத்தில் கூறப்பட்டிருக்கிறது. சேக்கிழார் இதை நம்பினார்; அக் காலத்து மக்களும் நம்பினார்கள் சமயங்களின் வரலாற்றில் இவ்விதமானதும் வேறுவிதமானதுமான அற்புதங்கள்

1. இந்த சம்பவம் பி.வி. காமேஸ்வரய்யா எழுதியிருக்கும் சுவாமிகளின் சரித்திரத்தில் குறிப்பிடப்படவில்லை.

நிகழ்ந்திருப்பதாகவே பெரியோர்கள் எழுதியிருக்கும் நூல்கள் கூறுகின்றன. ஆகையால், விஞ்ஞானத்தின் பெயராலும் பகுத்தறிவின் பெயராலும் இவற்றைக் கட்டுக்கதைகள் என்று ஒதுக்கி விடுவது விவேகம் அல்ல.

சுந்தர சுவாமிகள் சில நாட்கள் மதுரையில் தங்கி சூதசம்ஹிதை பிரவசனத்தை நடத்திவிட்டுத் தமது யாத்திரையைத் தொடர்ந்தார். இந்தப் பிரவசனத்தை சுத்தானந்த பாரதியாரின் தகப்பனாரும், ரமணமகரிஷியின் தகப்பனாரான திருச்சுழி வக்கீல் சுந்தரம் அய்யரும், சுவாமிகள் மதுரை சம்பந்தர் மடத்தில் செய்த சமயச் சொற்பொழிவையும் கேட்டதாக, சுவாமி ராமாநந்த பாரதியின் நூலில் குறிப்பிடப்பட்டிருக்கிறது.



சுந்தரசுவாமிகள் வணங்கிய பாண லிங்கம்

8

## சென்னை விஜயமும் சப்தஸ்தான கும்பாபிஷேகங்களும்

மதுரையிலிருந்து சுந்தரசுவாமிகள் திருச்சி, திருவானைக்கா வழியாய் திருவையாறு சென்றார். அவ்வூர் வாசிகள் சுவாமிகளின் மகிமையைக் கேட்டிருந்தால் அவரை யதீந்திரர்களுக்குரிய முறையில் வரவேற்றது உபசரித்தார்கள். திருவையாறு முதலிய சப்தஸ்தானங்களிலுள்ள ஆலயங்கள் ஜீரணோத்தாரணம் செய்ய வேண்டிய நிலையில் இருப்பதை சுவாமிகளிடம் எடுத்துக் கூறி, பரிகாரத்திற்காக அவருடைய கிருபையை நாடினார்கள். சுவாமிகளின் மனம் இளகியது. ஆனால் பணியோ மிகப்பெரியது; பொருளோ லட்சக் கணக்கில் வேண்டும். அரிமளம் சிவராமன் செட்டியார், சத்திரம் சின்னையா செட்டியார் ஆகியோருடன் கலந்து பேசினார். எப்படியும் தேவையான பணத்தை வசூல் செய்து இந்த அரிய காரியத்தைச் செய்துவிட வேண்டுமென்று தீர்மானித்தார்கள். பணவசூல் வேலையும் தொடங்கியது. இதற்காக சுவாமிகள் தமது சீடர்களை ஊக்குவித்து வெவ்வேறு இடங்களுக்கு அனுப்பினார்கள். தாமும் இந்த வேலையில் ஈடுபட்டார்கள்.

சுவாமிகள் சில சீடர்களுடன் கபிஸ்தலம் என்ற ஊருக்கு நன்கொடை வசூலுக்காகச் சென்றார். அன்று உமையாள் புரத்தருகில் அன்பம்மாள் என்பவளின் வீட்டில் நாராயண சிவன் போல் ஒருவர் தோன்றி "அம்மா, நாளை காலை 10

மணிக்கு கோடக நல்லூர் சுந்தரசுவாமிகள் இங்கே விஜயம் செய்யப்போகிறார்கள்; அவர்களுக்கு, பிள்ளையார் கோவிலுக்குப்போய் நீங்கள் பிக்ஷை அளிக்க வேண்டும்'' என்று கூறிவிட்டுப் போனார். தெய்வபக்தியும் பிற நற்குணங்களும் வாய்ந்த அந்த அம்மையார், இந்த சந்தர்ப்பம் தமக்குக் கிடைத்த பாக்கியமாகக் கருதி, மறுநாள் காலையில் சமையல் செய்து, உணவைப் பிள்ளையார் கோவிலுக்கு எடுத்துக்கொண்டு போய்க் காத்திருந்தார்கள். சுவாமிகளும் உரியகாலத்தில் வந்து பிக்ஷயை ஏற்றுக்கொண்டார். அந்த அம்மையார் சுவாமிகளிடம் முந்தின நாள் தம்மிடம் வந்து தகவல் கொடுத்த நாராயண சிவம் என்பவர் வரவில்லையா என்று கேட்டார். சுவாமிகள் சிரித்துக் கொண்டு ''நாராயண சிவம் இப்போது நாமக்கல் பக்கத்திலுள்ள முத்தக்காப் பட்டியில் இருக்கிறார். எனக்கு ஆகாரம் அளிக்க சிவபெருமான் இதுபோன்ற திருவிளையாடல்களைச் செய்கிறார்'' எனப் பதில் கூறினார். அந்த அம்மையார் ஆச்சரியமும் ஆனந்தமும் அடைந்து, பரமேஸ்வரனையே தரிசனம் செய்யும் பாக்கியம் தனக்குக் கிட்டியதை நினைந்து மனமுருகி, சுவாமிகளை வணங்கி, மீதமுள்ள அன்னத்தை அரிய பிரசாதமாகக் கருதி எடுத்துக்கொண்டு சென்றார்.

சுவாமிகள் பணவசூலுக்காக வேறு பல ஊர்களுக்கும் சென்றார். திருவாவடுதுறை மடாதிபதியிடமும் சென்றார். இந்த நிகழ்ச்சியை நேரில் கண்ட டாக்டர் உ.வே. சாமிநாதையர் எழுதியிருப்பதாவது:- ''சுந்தர சுவாமிகள் என்பவர் அதிவர்ணாசிரமம் பூண்ட ஒரு துறவி. வேதாந்த கிரந்தங்களிலும் சிவபுராணங்களிலும் தேர்ந்த அறிவுள்ளவர். சூதசம்ஹிதையை அங்கங்கே விரிவாகப் பிரசங்கம் செய்து பலருடைய உள்ளத்தில் சிவபக்தியை விதைத்த பெரியார் அவர். திருவையாற்றோடு சேர்ந்த ஸப்தஸ்தான ஸ்தலங்கள் ஏழிலும், திருமழபாடியிலும் பல செல்வர்களைக் கொண்டு

திருப்பணி செய்வித்து, அந்த எட்டு ஸ்தலங்களுக்கும் ஒரே நாளில் கும்பாபிஷேகம் நடத்த எண்ணிய அப்பெரியார் அதன் பொருட்டு தமிழ்நாட்டிலுள்ள சிவநேசச் செல்வர் களிடம் பொருளுதவி பெற்று வந்தனர். அவருடைய சிஷ்யர்கள் பலர். எல்லா வகுப்பினரிலும் அவருக்கு சிஷ்யர்கள் உண்டு. மகா வைத்தியநாதையர் அவரிடம் மந்திரோபதேசம் பெற்றுச் சில வேதாந்த நூல்களையும் பாடம் கேட்டனர். திருநெல்வேலியில் ஐயாசாமி பிள்ளை என்னும் அன்பர் அவருடைய உபதேசம் பெற்று ஒரு மடம் கட்டிக் கொண்டு தத்துவ விசாரமும் ஞானசாதனமும் செய்து வாழ்ந்து வந்தார். பாடுதுறை முதலிய நூல்களில் ஆழ்ந்த பயிற்சியுள்ளவர் அவர். திருவாவடுதுறைக்குச் சுந்தர சுவாமிகள் வந்தது கும்பாபிஷேகத்திற்கு பொருளுதவி பெறும் பொருட்டே. அவருடன் மகா வைத்தியநாதையர், திருநெல்வேலி ஐயாசாமி பிள்ளை முதலிய பலர் வந்தனர். பிள்ளையவர்களுக்கும் (சாமிநாதையரின் குருவாகிய மகாவித்துவான் மீனாட்சி சுந்தரம்பிள்ளை) சுந்தரசு வாமிகளுக்கும் முன்பே பழக்கம் உண்டு. பிள்ளையவர்கள் தமிழில் சூதசம்ஹிதையை மொழிபெயர்த்து இயற்றி யிருப்பது தெரிந்து அதிலுள்ள செய்யுட்களை மகாவைத்திய நாதையர் மூலமாகக் கேட்டு அதன் சுவையில் ஈடுபட்டு சுந்தரசுவாமிகள் பாராட்டுவார். வடமொழி சூதசம் ஹிதையில் நிரம்பிய ஞானமுள்ள அவருக்குத் தமிழ் நூலின் பெருமை நன்றாக வெளிப்பட்டது. அவர் தம்முடைய பிரசங்கங்களில் இடையிடையே தமிழ் சூதசம்ஹிதை யிருந்தும் சில செய்யுட்களைச் சொல்லுவதுண்டாம், சுவாமிகள் வரவை அறிந்த எங்கள் ஆசிரியர், அவர் இருந்த இடத்திற்கு வந்து அவரை வந்தனம் செய்தார். அப்பால் இருவரும் சைவசம்பந்தமான அரிய விஷயங்களைப் பற்றி ஒருவரோடொருவர் சில நேரம் மிக அழகாகப்

*பேசிக்கொண்டார்கள். எங்களுக்கு அச்சம்பாஷணையால் பல நூதன விஷயங்கள் தெரியலாயின. சுப்பிரமணிய தேசிகர் (மடத்துச் சின்னப்பட்டம்) தம்வரவை எதிர்பார்த்திருக்கிறார் என்றறிந்து சுவாமிகளும் பிறரும் எழுந்து சென்றார்கள். தேசிகர் ஒடுக்கத்தின் வாயிலுக்கு வந்து சுவாமிகளை வரவேற்று அழைத்துச் சென்று, அவரை இருக்கச் செய்து தாமும் ஆசனத்தில் அமர்ந்தார். அவர் உத்தரவுப்படியே யாவரும் அருகில் இருந்தனர். அக்கூட்டத்தில் இருந்த நான் மகா வைத்தியநாதையர் முகத்தையும் சுந்தரசுவாமிகள் முகத்தையும் மாறிமாறிப் பார்த்துக்கொண்டே இருந்தேன். தேசிகரும் சுவாமிகளும் முதலில் முகமன் கூறிக் கொண்டு, அப்பால் பல விஷயங்களைப் பற்றிப் பேசினார்கள். வந்த காரியத்தைச் சுவாமிகள் தெரிவித்தார். தேசிகர் உசிதமான பொருளுதவி செய்வதாக வாக்களித்தார்.''*

*பின்னர், சுந்தரசுவாமிகள் கும்பாபிஷேகத்திற்குப் பொருளுதவிபெறவும், தமது பக்தர்களாகிய குஜராத்தி பிராமணர்களுக்கு தரிசனம் கொடுக்கவும், சீடர்களுடன் சென்னைக்கு விஜயம் செய்தார். அங்கே முன்னேற் பாட்டின்படி ஏகாம்பரேஸ்வர் அதிகாரம் 27ம் நம்பர் வீட்டில் தங்கினார். பல வருடங்களாக, திருநெல்வேலியிலிருந்து குஜராத்தி பிராமண சமூகத்திலுள்ள முக்யஸ்தர்கள் சுவாமிகளின் சீடர்களாயிருந்தார்கள். தஞ்சாவூரைச் சேர்ந்த ஜீவாபாய் அம்மாள் முதலியோரும் சுவாமிகளிடம் ஈடுபட்டவர்கள். இவர்களின் உறவினர் பலர் சென்னையில் இருந்தார்கள். அவர்கள் சுவாமிகளின் விஜயத்தை ஆவலோடு எதிர்பார்த்துக் கொண்டிருந்தார்கள். ஜீவாபாய் அம்மாளும்*

1. என் சரித்திரம்: டாக்டர். உ.வே.சாமிநாதையர் (427-29) கும்பாபிஷேகங்களுக்கு முன்னரே மகா வைத்திய நாதையர் சுவாமிகளின் சீடராயிருந்தார் என்பது இதிலிருந்தும் ஊர்ஜிதமாகிறது.

அவருடைய கணவர் சுப்பராய் டாக்டர் அவர்களும் எல்லா ஏற்பாடுகளையும் செவ்வனே செய்திருந்தார்கள். புஷ்பகிரி மடத்தில் சுந்தர சுவாமிகள் சூதசம்ஹிதையை பஞ்சாக முறைப்படி பிரவசனம் செய்தார். மக்கள் பெருந் திரளாகக் கூடி சுவாமிகளின் பொன்மொழிகளைக் கேட்டார்கள். இரண்டாம்நாள் பிரவசனம் நடைபெற்றபோது, சுவாமிகளின் பெருமையைப்பற்றி சந்தேகம் கொண்டவர்கள் சிலர் வந்திருந்தார்கள். இதை உணர்ந்த சுவாமிகள், தாம் அமர்ந்திருந்த ஆசனத்துடன் நீண்ட நேரம் ஆகாயத்தில் எழுந்து மிதந்து கொண்டு பிரவசனத்தைச் செய்து கொண்டிருந்தார். இதைப் பார்த்த சந்கேப் பிறவிகள், தங்கள் ஐயப்பாடுகளை ஒழித்து, வருந்தி, சுவாமிகளின் மெய்யன்பர் களானார்கள். சுந்தரசுவாமிகள் தெய்வீகம் பெற்றவர் என்ற செய்தி நகரெங்கும் பரவியது.

குஜராத்தி பிராமண சமூகத்தைச் சேர்ந்த அம்பா சங்கர் தவே, ராஜாராம் தருவாடி, ராஜீபாய் அம்மாள் முதலியோர் சுவாமிகளின் சீடர்களாய் அனுக்கிரகம் பெற்றார்கள். ராஜீபாய் அம்மாளின் வேண்டுகோளின்படி சுந்தரசுவாமிகள் இரண்டாவது தடவை சூதசம் ஹிதையை பஞ்சாகமாக பிரவசனம் செய்து குஜராத்தி பிராமண சமூகத்தை மகிழ்வித்து சிவபக்தி மார்க்கத்தில் இழுத்தார். அச்சமூகத்தைச் சேர்ந்தவர்கள் திருநீறு பூசி, கழுத்தில் ருத்ராக்ஷம் தரித்து சிவபஜனை செய்யத் தொடங்கினார்கள். சிலர் சிவ பூசையையும் செய்தார்கள். இந்தச் சமூகத்தைச் சேர்ந்தவர்கள் செல்வந்தர்களாயிருந்தார்கள். திருவையாறு கோவில்கள் கும்பாபிஷேகத்திற்கு, சுவாமிகளின் மீதுள்ள பக்தியால் பெரும் பண உதவி செய்தார்கள்.

இச்சமயம், சென்னையிலிருந்து சுந்தர சுவாமிகள் காசிக்குப் புறப்பட்டுப் போய் அங்கு சில நாட்கள் தங்கி விட்டு

சென்னைக்குத் திரும்பினார். இந்தப் பிரயாணத்தைப் பற்றிய விவரங்கள் எதுவும் கிடைக்கவில்லை. கும்பாபிஷேகத்திற்கு பண உதவி தேடவே போயிருக்கலாம் என்று ஊகித்தால் தவறாகாது. ஏனென்றால் இக்காலத்தில் சுவாமிகளின் காலம் முழுவதும் இதில் தான் முனைந்திருந்தது.

அப்புறம் சுந்தர சுவாமிகள், தமது சீடர்கள் குழாத்துடன் திருவையாறு வந்து கும்பாபிஷேக வேலையில் ஈடுபட்டார்கள். தமிழ்நாட்டின் பல பாகங்களிலிருந்தும் பக்தர்கள் பணவசூல் செய்து கொடுத்ததுடன், தஞ்சைக்கு வந்து கும்பாபிஷேகப் பணியிலும் உதவி செய்தார்கள். தஞ்சையைச் சேர்ந்த மக்களும், வைதிகப் பயிற்சியுடைய தீக்ஷிதர்களும் கனபாடிகள் பலரும் இரவு பகலாக உழைத்தார்கள். எல்லா ஏற்பாடுகளும் மும்முரமாகவும் பெரிய அளவிலும் நடைபெற்றன. ஒரே நாளில் எட்டுப் பெரிய கோவில்களின் அஷ்டபந்தன கும்பாபிஷேகம் வரலாற்றில் காணப்பெறாத முறையில் நிகழ்ந்தது. 1047ம் ஆண்டு (1872) ஆங்கீரச வருடம் வைகாசி மாதத்தில் ஒரு நன்னாளில் திருச்சோற்றுத்துறை, திருவேதிகுடி, திருப்பூந்துருத்தி, திருநெய்த்தானம், திருப்பெரும்புலியூர், திருமழபாடி, திருத்திங்களூர், திருக்கடுவெளி ஆகிய கோவில்களின் அஷ்டபந்தன கும்பாபிஷேகம் நிறைவேற்றப் பட்டது. ஒரு லட்சம் பேருக்கு அன்னதானம் வழங்கப் பட்டது. அதே வருடம் ஆனி மாதம் 3ம் தேதி திருவை யாற்றிலும் 9ம் தேதி திருக்கண்டியூரிலும் ஆலயங்களின் கும்பாபிஷேகம் தொடர்ந்து நடைபெற்றன. ஒரு வருடத்திற்கு மேல் நாடெங்கும் சென்று இடையறாது உழைத்து இவ்வளவு மகத்தான பணியைச் செவ்வனே ஆற்றியது சுந்தர சுவாமிகளின் வாழ்க்கையின் மகத்தான சாதனையாய் அமைந்தது. கும்பாபிஷேக வைபவம் முடிந்ததும், அதற்கு வந்திருந்த பெரியோர்களுக்கு ஆசி கூறி

சுவாமிகள் விடைகொடுத்தனுப்பினார். சுவாமிகளும் தமது சீடர்களுடன் திருநெல்வேலிக்கு வந்து பஜனை மடத்தில் தங்கினார்கள்.

பின்னர், தாம் பிறந்த ஊராகிய கங்கை கொண்டானி லுள்ள ஆனந்தவல்லி சமேதரான கைலாசநாதர் கோவிலுக்கு அஷ்டபந்தன கும்பாபிஷேகம் நடத்த வேண்டுமென்று அவ்வூர் வாசிகள் சுந்தரசுவாமிகளை அணுகினார்கள். அவரும் தமது இசைவைத் தெரிவித்தார். முந்தின வருடத்தில் தஞ்சை மாவட்டக் கோவில்களின் கும்பாபிஷேகத்திற்காகத் தமிழ்நாடெங்கும் நன்கொடைகள் வசூல் செய்யப் பட்டதால், இந்த வருடம் சுவாமிகள், அரிமளம் சிவராமன் செட்டியார் முதலிய சீடர்களுடன் கொழும்பு சென்று பணத்தைத் தேடிக்கொண்டு வந்தார். தூத்துக்குடியிலிருந்து வல்ல நாடு வழியாக தமது சீடர்களுடனும் பணத்துடனும் கங்கை கொண்டானுக்கு வரும்போது, வல்லநாட்டுப் பொத்தையில், திருடர்கள் அவர்களிடமிருந்த பணத்தைப் பறிக்க முயன்றார்கள். ஆனால் சுவாமிகளின் கூட வந்தவர்கள் ஆயுதபாணிகளாய் திருடர்களுக்குக் காட்சி அளிக்கவே, அவர்கள் பின்வாங்கி ஓடிவிட்டார்கள். கோவிலின் திருப்பணி குப்பாணிசிவன் மேற்பார்வையில் நடைபெற்றது. பின்னர் 1048ம் ஆண்டு ஸ்ரீ முக வருடம் வைகாசிமாதம் 19ம் தேதியன்று (1873) அஷ்டபந்தன கும்பாபிஷேகம் சிறப்பாக நிகழ்ந்தது. தஞ்சையிலிருந்து இசைமன்னன் மகா வைத்தியநாதையரும் அவருடைய சகோதரர் ராமசாமி அய்யரும் கங்கை கொண்டான் வந்து சில நாட்கள் தங்கி, சுவாமிகளுக்கு உறுதுணையாயிருந்து கும்பாபிஷேகப் பணியில் ஒத்துழைத்தார்கள். இதுதான் சுவாமிகள் நடத்திய கடைசிக் கும்பாபிஷேகம் என்று சொல்லப்படுகிறது. சுவாமிகள் தாம் பிறந்த ஊரின் ஆலயத்தின் கும்பாபிஷேகத்தை கடைசியாகவும், தாம்

மறையப்போகும் ஊராகிய அரிமளத்தின் கோவிலின் கும்பாபிஷேகத்தை முதலாவதாகவும் செய்ததில் ஏதோ ஒரு தத்துவம் இருக்க வேண்டும் என்று மக்கள் கருதினார்கள்.

கங்கைகொண்டான் ஆலயத்தின் கும்பாபிஷேகப் பணி முடிந்தவுடன் சுந்தரசுவாமிகள் நெல்லையில் சிலகாலம் தங்கினார்கள். குலசேகரன்பட்டினம் மக்களின் வேண்டு கோளுக்கிணங்கி சுவாமிகள் தமது சீடர்களுடன் அங்கு சென்று சூதசம்ஹிதை படனத்தை பஞ்சாகமாக நடத்தினார். இரண்டாம் நாளில், தமது தமையனார் குப்பாணிசிவன் சிலலோகப்ராப்தி அடைந்ததை தமது ஞானதிருஷ்டியால் அறிந்து, பக்கத்திலுள்ள மாவடி சிதம்பரம் பிள்ளையிடம் ரகசியமாய்ச் சொல்லிவிட்டுச் சற்று நேரம் மௌன மாயிருந்தார். நாலாம் நாள் படனம் முடிந்தவுடன், இரவில் சிவபஜனையுடன் கதாகாலட்சேபமும் நடந்த பின்னர் சுவாமிகள் இரவில் கடற்கரைக்குச் சென்றிருந்தார். அப்போது சுவாமிகள் அசாதாரணமான ஒரு குரல் எழுப்பி அண்டையிலிருந்த எல்லோரையும் திடுக்கிடச் செய்தார். அவர்கள் சுவாமிகளிடம் 'இதென்ன?' என்று கேட்கவே, அவர்கள் பத்தமடை கோவிலில் திருடர்கள் புக யத்தனித் தார்கள் என்றும், குரல் கொடுத்து ஊர்மக்களை எழுப்பிய தாகவும் பதிலுரைத்தார். அடுத்த தினம், மேலே குறிப்பிடப் பெற்ற விஷயங்களை உறுதிசெய்து கடிதங்கள் வந்தன. சுவாமிகளைச் சூழ்ந்திருந்த பக்தர்கள் ஆச்சரியத்தில் மூழ்கினார்கள்.

சுவாமிகள் திருச்செந்தூர் வந்து ஆலயத்தில் முருகனை தரிசனம் செய்துவிட்டு நெல்லை திரும்பினார். திருநெல் வேலியில் 1876ல் மூன்றாவது லட்சதீபத்தையும் விமரிசையாக நடத்தினார்.

9

# சுந்தர சுவாமிகளும் சுந்தரம் பிள்ளையும்

கடந்த நூற்றாண்டில் நெல்லைப் பிரதேசத்தில் கிறித்தவ பாதிரிகள் மதமாற்றப் பிரசாரம் தீவிரமாக நடைபெற்றதையும், அதன் விளைவாக உயர்குடும்பத்தைச் சேர்ந்த சில வாலிபர்கள் கிறித்துவ மதத்தைத் தழுவியதையும் தொடக்க அத்தியாயத்தில் குறிப்பிட்டிருக்கிறோம். கிறித்துவ சமய நிறுவனங்கள் பல பள்ளிகளை ஆரம்பித்து அவற்றின் மூலம் ஆங்கிலத்தில் தற்காலக் கல்வியைப் போதிக்க ஏற்பாடுகள் செய்தன. படிப்புக்காக வரும் இந்து மாணவர்களில் சிலரைச் சமயம் வந்தபோது கிறித்துவத்தைத் தழுவச் செய்தார்கள். இதனால், நெல்லை இந்து சமுதாயத் தலைவர்களிடம் பரபரப்பு ஏற்பட்டது. இந்து மாணவர்களுக்கு தற்கால ஆங்கிலக் கல்வி அளிக்க ஒரு உயர்நிலைப் பள்ளியை நிறுவினார்கள். அது தொடக்கத்தில் திருநெல்வேலி டவுனில் இயங்கியது. பின்னர் திருநெல்வேலி ஜங்ஷனுக்கு மாற்றப்பட்டது. இதற்குத் தகுதியுள்ள தலைமை ஆசிரியர் வேண்டும் என்று கருதி திருவநந்தபுரத்தில் அக்காலத்தில் இருந்த பேராசிரியர் பி.சுந்தரம்பிள்ளையைக் கொண்டு வந்தார்கள்.

சுந்தரம் பிள்ளை திருவநந்தபுரம் மகாராஜா கல்லூரியில் பட்டம் பெற்று, அக் கல்லூரியிலேயே கொஞ்சகாலம்

ஆசிரியராய் இருந்தார். பின்னர் 1877-ல் நெல்லை இந்து உயர்நிலைப்பள்ளிக்கு தலைமை ஆசியராகப் பணி ஆற்றினார். உயர்நிலைப்பள்ளி 1878-ல் இரண்டாவது தரக் கல்லூரியாக உயர்த்தப்பட்டது. அதன் முதல்வராக அவரே தொடர்ந்து இருந்து, அதற்கடுத்த வருடம் திருவந்தபுரத்திற்கு தான் படித்த கல்லூரிக்கே தத்துவப் பேராசிரியராகச் சென்றார். சுந்தரம் பிள்ளை நெல்லையிலிருந்தபோது கோடகநல்லூர் சுந்தர சுவாமிகளின் பெருமையைப் பலர் சொல்லக் கேட்டிருந்தார். அவர் தத்துவத்துறையில் பெரிய பட்டம் பெற்றிருந்த போதிலும், அக்காலத்து பாடத் திட்டப்படி மேனாட்டு தத்துவ அறிவிலேயே அதிகப் பயிற்சி பெற்றிருந்தார். நமது நாட்டுத் தத்துவஞான அறிவைப் பற்றியும் நூல்களைப் பற்றியும் தெரிந்துகொள்ள ஆசைப் பட்டார். இந்த நோக்கத்துடன் சுந்தர சுவாமிகளைப் பார்த்து அடிவணங்கி, அவருடைய சீடரானார். சுவாமிகளும் அவருக்கு ஷட்தரிசனங்களையும், உபநிடதங்களையும் பிற வேதாந்த நூல்களையும் போதித்தார். நுட்பமான தத்துவக் கருத்துக்களை சுவாமிகள் தெளிவாக விளக்குவதைக் கண்டு வியந்து சுவாமிகளைப் பாராட்டினார். சுவாமிகளின் போதனையும் விளக்கங்களும் நூல்வடிவில் வந்தால் உலகத்திற்குப் பயன்படும் என்று சுந்தரம்பிள்ளை விண்ணப்பித்தார். குரு அதற்கு சம்மதிக்கவே கற்றுச் சொல்லிகள் தங்கள் பணியைத் தொடங்கினார்கள். இவ்வாறு எழுதப்பெற்ற நூல் 'நிஜானந்த விலாசம்' என்ற பெயரில் அச்சடிக்கப் பெற்றது. அதைப் பேராசிரியர் சுந்தரம் பிள்ளையே பதிப்பித்தார்.

சுந்தரம் பிள்ளை 1879-ல் திருவனந்தபுரத்திற்குச் சென்ற போதிலும், அவர், தம் வாழ்நாள் முழுவதிலும் சுந்தர சுவாமிகளைத் தமது குருவாகக் கருதி மதித்து வந்தார். 1891-ல் அவர் எழுதி வெளியிட்ட 'மனோன்மணீயம்' என்ற செய்யுள்

நடை நாடகத்தில், சுந்தர சுவாமிகளை மனத்தில் வைத்துக் கொண்டு, சுந்தர முனிவர் என்ற ஒரு முக்கிய பாத்திரத்தை சிருஷ்டித்திருக்கிறார். சுந்தர முனிவர், தமது கருணையாலும் ஞான வலிமையாலும், தமது சீடனாகிய பாண்டிய அரசன் ஜீவகனையும், அவன் மகளும் நாடகத்தின் தலைவியுமான மனோன்மணியையும், அவர்களுக்குத் துரோகம் செய்த துர்மந்திரியான குடிலனுடைய வலையிலிருந்து காப்பாற்றி, அவனுக்குத் தண்டனையும் கிடைக்கும்படி செய்து, மனோன்மணியையும் தனது கனவுக்காதலனான சேர அரசன் புருஷோத்தமனை அடையச் செய்கிறார். அவருடைய தோற்றப் பொலிவையும் குண நலன்களையும் மனோன்மணியின் மூலம் இவ்வாறு கூறுகிறார்.

*சுந்தர முனிவன் சிந்துர அடியும்*
*வாரிசம் போன்ற மலர்ந்த வதனமும்*
*கருணை அலையெறிந் தொழுகுங் கண்ணும்*
*பரிவுடன் முகிழ்க்கு முறுவலும், பால்போல்*
*நரைதரு தலையும், புரையறும் உரையும்,*
*சாந்தமுந் தயை தங்கிய உடலும்*

*-முதல் அங்கம், களம் -2 [89-94]*

அரச குமாரியாகிய மனோன்மணி, தனது தோழியாகிய வாணியிடம்,

*என் கருத்து உண்மையில்*
*வனத்தில் எய்தி வற்கலை புனைந்து*
*மனத்தை அடக்கி மாதவம் செய்தற்கே.* ஷெ ஷெ [86-88]

என்று கூறியிருப்பதில், புதுக்கோட்டையில் ராமாசாஸ்திரி என்பவரின் பெண் குழந்தையை சுந்தரசுவாமிகள் அநுக்கிரகித்து, 'குழந்தாய், என்ன வேண்டும்' என்று கேட்டபோது, அந்தப் பெண் 'எனக்கு ஞானம் வேண்டும்' என்று சொன்ன பதிலை ஞாபகப்படுத்துகிறது. சுந்தர சுவாமிகளின் ஞானக் கருத்துகளையும் வேதாந்த அநுபவ உண்மைகளையும்

'மனோன்மணிய'த்தில் பல இடங்களிலும், சிறப்பாக நிஷ்டாபரர் - கருணாகரர் சம்பாஷணையிலும், நாராயணனின் பேச்சுக்களிலும், 'சிவகாமி சரிதம்' என்ற இன்னிசைப் பாட்டிலும் வைத்திருக்கிறார் சுந்தரம் பிள்ளை. நூலின் முகவுரைக்கு அடியிலும், முடியிலும்'' குரு சுந்தர சரணாலயம்'' என்று வரைந்திருப்பதிலிருந்து அவருடைய குருபக்தி புலப்படுகிறது.

இந்த நாடகத்தை எழுதுவதினால் தமிழில் நாடக இலக்கியம் இல்லாத குறையை ஓரளவு பூர்த்தி செய்வது தமது நோக்கம் என்று ஆசிரியர் எழுதியிருப்பது உண்மை. நாடகம் முழுவதையும் நுட்பமாகப் படித்துப் பார்த்தால், அதைவிட ஒரு சிறந்த நோக்கத்துடனேயே அதைச் சமைத்திருக்கிறார். என்று தோன்றும். அது சுந்தர சுவாமிகளுக்குக் காணிக்கை செலுத்துவதே. நாடகத்தின் கதையிலும் கருத்துக்களிலும் பாத்திரங்களின் சம்பாஷணைகளிலும் இந்த நோக்கம் முனைந்திருப்பதைப் பார்க்கலாம்.

இந்த சமயத்தில் கோடக நல்லூர் சுந்தர சுவாமிகளுக்கும் வடலூர் ராமலிங்க சுவாமிகளுக்கும் இருந்த தொடர்பைப் பற்றிச் சில வார்த்தைகள் சொல்லலாம். இருவரும் ஆன்ம ஞானத் துறையில் உச்ச நிலையை அடைந்து கடவுள் தத்துவத்தை அநுபவித்து, வேண்டும் போது பல அபூத அற்புதங்களைச் செய்தவர்கள். அவர்களிடம் பரஸ்பரம் அன்பும் மரியாதையும் இருந்தன. அவர்கள் எத்தனை தடவை எப்போது சந்தித்துக் கொண்டார்கள், அச்சந்திப்புகளில் என்னென்ன பேசிக்கொண்டார்கள் என்பதைப்பற்றித் தெரிய மார்க்கமில்லை. ஆனால், ஒரு சந்திப்பைப்பற்றி எழுதப்பெற்றிருக்கும் விவரங்கள் சில சந்தேகங்களுக்கு இடம் தருகின்றன. அக் குறிப்பு வருமாறு:-

'அதி வருணாசிரமம் பூண்ட கோடக நல்லூர் சுந்தர சுவாமிகள், சிதம்பரத்தில் கிழக்குச் சந்நிதி வீதிச் சத்திரத்தில் அன்பர்களுடன் எழுந்தருளியிருந்த காலத்தில், வடக்குச் சந்நிதி வீதியிலிருந்த வள்ளலார் சுந்தர சுவாமிகளிடம் சிலரை அனுப்பிச் சமயம் பார்த்துவரக் கட்டளையிட்டனர். அன்பர்கள் சென்றவுடன், சுந்தர சுவாமிகள் அறிந்து, "இங்கா சமயம் பார்க்கச் சொன்னது" என்று கூறி, உடனே புறப்பட்டு அன்பர் கூட்டத்துடன் சிவநாமம் புகன்று கரகோஷத்துடன் வள்ளலார் இருந்த இடத்திற்குச் சென்றனர். உடனே வள்ளலாரும் சுவாமிகளும் ஒருவரையொருவர் இறைஞ்சிப் போற்றினர்.

வள்ளலார் சுவாமிகளைத் தம் எதிரில் உட்காரும்படி பலமுறை சொல்லியும் வள்ளலார் திருமுன்பு உட்காராமல், வள்ளலார்க்கு ஒருபால் அமர்ந்தனர். ஞான விஷயமாய் இருவரும் மூன்று நாள் வார்த்தையாடியதில் சுந்தர சுவாமிகள் தோல்வியடைந்து மனம் சோர்ந்ததைக் கண்டு, வள்ளலார் உபசரித்துவிட்டு, மறுபடியும் தோல்வியடைந்தோர் பக்கம் மாறி, வாதம் நிகழ்த்திச் சுந்தர சுவாமிகளைக் களிப்பித்தனர்.

அப்பால், சுந்தர சுவாமிகள் கீழ் வீதிச் சத்திரம் சென்றபோது வழிவிடப் போயிருந்த அன்பர்கள், வள்ளலார் திருமுன்பு உட்காராததற்குக் காரணம் வினவ, தம் எதிரில் உட்காருவோர் சக்தியை வள்ளலார் அப்போதே இழுத்துக் கொள்ளும் ஆற்றல்மிக்க சித்தர் என்று சுவாமிகள் விடையளித்தனர். வள்ளலார் தமது அன்பர்களிடம், "இன்னும் ஆறு மாதத்தில் சுவாமிகளின் தேகம் விழும்" என்று கூறிக் கண்ணீர் விட்டனர். அங்ஙனமே ஆறாம் மாதத்தில் சுவாமிகள் சிவபிரான் திருவடி அடைந்தனர்.

நடந்தது மேலே சரிவரக் கூறப்பெற்றிருக்கிறதா என்ற ஐயம் எழுகிறது. சுந்தர சுவாமிகள், தமது வாழ்நாளில்,

*சமயஞான விஷயங்களைப்பற்றி எவருடனும் வாதப்போர் நடத்தியதாகத் தெரியவில்லை. அவருடைய விருத்தி அந்த வழியில் ஈடுபடவில்லை. ராமலிங்க சுவாமிகளும், சில சமயங்களில் லௌகிக உணர்வோடு நடந்து கொள்ளக் கூடுமாயினும், ஒரு பொருளைப் பற்றி நேர்மாறான இருவிதமான வாதங்களை, தமது திறமையைக் காட்ட மாத்திரம் செய்தார் என்று சொல்வதும் பொருத்தமில்லை; அவருக்குப் பெருமையும் இல்லை. ராமலிங்க சுவாமிகள் "இன்னும் ஆறு மாதத்தில் சுவாமிகளின் தேகம் விழும்" என்று தமது அன்பர்களிடம் கூறிக் கண்ணீர் வடித்தார் என்று கூறப்பட்டிருக்கிறது. இதில் நிச்சயமாகப் பிழை இருக்கிறது. ராமலிங்க சுவாமிகள் இவ்வாறு கூறியிருக்க மாட்டார். இந்தச் சந்திப்பு அநேகமாக 1872-ல் நிகழ்ந்திருக்கலாம், ராமலிங்க சுவாமிகள் 1874 ஜனவரி 30-ந்தேதி மறைந்தார். கோடகநல்லூர் சுந்தர சுவாமிகள் அரிமளத்தில் சித்தி அடைந்தது 1878-ல் ஆகையால், மேலே காட்டப்பெற்ற குறிப்பு இரு பெரியோர்களும் சந்தித்தபோது, கூட இருந்து அவர்கள் பேச்சைப் புரிந்துகொள்ளக்கூடிய ஒருவரால் எழுதப்பெறவில்லை என்று தெரிகிறது.*

---

1. சிதம்பரம், ராமலிங்க சுவாமிகள் திருவருட்பா, காரணப்பட்டு ச.மு.கந்தசாமி பிள்ளை பார்வையிட்டது. தி.நா. முத்தையா செட்டியார் பதிப்பித்தது - சரித்திரக் குறிப்புகள் - பக்கம்-16 (1924)

# 10

## சுந்தரசுவாமிகளின் இறுதிக்காலம்

சுந்தரசுவாமிகள், தமது பரிவாரத்துடன் வட ஜில்லாக்களில் சுற்றுப் பிராயணம் செய்துவிட்டு அரிமளம் வந்து தங்கினார். ஒருநாள் தாம் சித்தியடைய வேண்டிய காலம் வந்துவிட்டதை அறிந்த அவர், அங்கு குழுமியிருந்த தமது சீடர்களையும் பக்தர்களையும் அழைத்து, அவர்களிடமிருந்து விடை பெற்றுக் கொள்ளும் முறையில் சில வார்த்தைகளை அன்புடன் கூறினார். அத்துடன், தாம் வைத்திருந்த நர்மதா பாணலிங்கம் ஒன்றை தமது அடியார்களிடம் கொடுத்து அது இருக்கும் இடம் மங்களகரமா யிருக்கும் என்று தெரிவித்தார். அப்புறம் 1054-ம் ஆண்டு ஐப்பசி மாதம் 6-ந் தேதி திங்கட்கிழமை கிருஷ்ண பட்சதசமியன்று (1878 அக்டோபர் -21) சித்தியடைந்தார்.

சிவராமன் செட்டியாரும், சுவாமிகளின் மற்ற சீடர்களும் செய்ய வேண்டிய கிரியைகளைச் செய்து, சுவாமிகளின் சமாதிமீது ஒரு கோவிலைக்கட்டி, அதில் அவர் கொடுத்திருந்த பாணலிங்கத்தைப் பிரதிஷ்டை செய்தார்கள். கும்பாபிஷேகமும் நடைபெற்றது. அந்தக் கோவிலில் பூசைகள் முதலிய ஆராதனைகள் ஏற்பட்டன. இன்றுவரை அவை தொடர்ந்து நடை பெற்று வருகின்றன. ஆயிரக் கணக்கான சிவபக்தர்கள் அங்கே போய் வணங்கி வருகிறார்கள்.

கோடக நல்லூர் சுந்தரசுவாமிகள் மறைந்து 30 வருடங்கள் ஆகின்றன. மேலே கூறப்பெற்ற வரலாற்றிலிருந்து அவருடைய சமயப்பணியும், ஆன்மீக சக்தியும் சீடர்கள்மீது காட்டிய அன்பும் கருணையும் நன்றாக விளங்கும். அவர் காலத்திலேயே அவருடைய பெருமையைத் தெரிந்து பேராசிரியர் சுந்தரம்பிள்ளை, சங்கீத மேதை மகா வைத்தியநாதையர், அரிமளம் சிவராமன் செட்டியார், கோவிலூர் சிதம்பரய்யா, நெல்லை ஐயாசாமி பிள்ளை, பிச்சு சுவாமிகள், மாவடி சிதம்பரம் பிள்ளை, பஜனை சிதம்பரம் பிள்ளை, சதாசிவ தருவாடியார் போன்ற பல பெரியோர்கள் அவர்களுடைய சீடர்களாயிருந்து அநுக்கிரகம் பெற்றார்கள். அவரை நேரில் பார்க்கும் பாக்கியம்பெற்ற டாக்டர் உ.வே.சாமிநாதய்யர், சுவாமிகள் திருவாவடுதுறைக்கு வந்ததைப் பற்றி எழுதியிருப்பதை முன்னர் எடுத்துக்காட்டி யிருக்கிறோம். அவர் வேறொரு சந்தர்ப்பத்தில் சுவாமிகளைப் போற்றியிருப்பதாவது:- "சிவபக்திச் செல்வத்தைத் தமிழ் நாட்டில் நன்றாகப் பரவச்செய்து பெரும்புகழுடன் விளங்கிய புண்ணிய சீலர்கள் பலர். அத்தகைய மகான்களுள் திருநெல்வேலியைச் சார்ந்த கோடகநல்லூர் ஸ்ரீ சுந்தர சுவாமிகள் ஒருவர். இவருடைய தோற்றப் பொலிவையும் இன்னுரைகளையும் கண்டும் கேட்டும் இன்புற்றேன். சிவ சின்னங்களின் பெருமையையும், சிவபூசைச் சிறப்பையும், சிவபக்தியின் மேன்மையையும், சிவபக்தர்களின் உயர்வையும் தம்முடைய பிரசங்கங்களால் தமிழ் நாட்டார் உள்ளத்தில் நன்றாகப் பதியும்படி வெளிப்படுத்திய மேம்பாடு இவர்களுக்கு உண்டு. ஏகருத்ராக்ஷதாரணம் செய்துகொள்ளும் வழக்கத்தை தமிழ்நாட்டில் நிலைக்கச் செய்தவர் இப் பெரியாரே." இந்த நூற்றாண்டில் ஆன்மீகத் துறையில் மிகவுயர்ந்து ரிஷிகேசத்தில் ஒரு ஆசிரமத்தை ஸ்தாபித்து ஆயிரக் கணக்கான மாணவர்களுக்கு யோக

விஷயங்களைப்பற்றி உபதேசம் செய்து புகழ்பெற்றிருக்கும் சுவாமி சிவாநந்தர் (இவர் சுந்தர சுவாமிகளின் வளர்ந்த பத்தமடையைச் சேர்ந்தவர்) சுந்தர சுவாமிகளைப் பற்றிக் கூறியிருப்பதாவது:- "சுந்தர சுவாமிகள் ஆனந்தமான அத்தியாத்தும அநுபவங்களால் நிறைந்த ஞானி; அநேக சித்திகள் பெற்றவர். ஜீவன் முக்தன் எனப்படும் பரம ஞானிக்குரிய குணாதிசயங்கள் அனைத்தும் அவரிடம் இருந்தன. உலகிலே இருந்தும் உலகத்தாரோடு பற்றிலா திருந்தார். பூமியில் அவதரித்த தெய்வமே அவர். அவர் சென்ற இடமெல்லாம் மக்களைச் சீர்திருத்தினார். மிகவும் சக்தி வாய்ந்த காந்தம் அவர். அத்யாத்தும வீரர் அவர். இந்தியாவிற்கு ஒளி காட்டி வழிபடுத்தும் தனிவிளக்காய் விளங்கிய ஸ்ரீ சுந்தர சுவாமிகளுக்கு மங்களம்" இவ்விரு பெரியார்கள் சொன்னதைவிட அதிகமாகச் சொல்ல வேண்டியது ஒன்றுமில்லை.

சுந்தர சுவாமிகளின் வாழ்க்கையை நுட்பமாக ஆராய்ந்தால், அவர்கள், மோக்ஷத்திற்குரியதாகச் சொல்லப்படும் கர்மம், பக்தி, யோகம், ஞானம் ஆகிய நான்கு மார்க்கங்களையுமே இணைத்துச் செயல்பட்டவர். அவர் நிறைந்த குணமுடையவர். தம்மைச் சந்தேகப் பட்டு குறைவாகக் கருதியவர்களிடம் அவர் பச்சாத் தாபப் பட்டாரே யொழியக் கோபப்படவில்லை. தாம் ஞான நிலையை அடைந்திருந்தும் மக்களின் பக்குவத்திற் கவசியமான ஆலய வழிபாடு, ஈஸ்வர பஜனை முதலியவற்றை வற்புறுத்தி, அந்தத்துறைகளில் தாமும் ஈடுபட்டு வழிகாட்டி யாயிருந்தது அவரது பரந்த கருணையைக் காட்டுகிறது. இவ்வளவு உயர்ந்த ஆன்மஞானியும் சிவாநுபூதிச் செல்வரும் ஆகியவரின் புகழ் ஓங்குக! அவரைப் பற்றிய சிந்தனை மக்களின் மனத்தைவிட்டு அகலாதிருக்க!

## 11

## சுந்தர சுவாமிகளின் நூல்கள்

சுந்தர சுவாமிகளின் நூல்களைப்பற்றிச் சுருக்கமாகக் கூற வேண்டும். அவருடைய நூல்கள் என்று சொல்லும் போது, இன்று நூலாசிரியர்கள் காகிதம் பேனாவை வைத்துக் கொண்டு ஒரு பொருளைப்பற்றி சிந்தனை செய்து எழுதுவதுபோல் சுவாமிகள் நூல் எழுதியதாக நினைக்கக் கூடாது. அவர் வேதாந்த நுட்பங்களை, சூதசம்ஹிதை படனம்போதோ, வேறு சொற்பொழிவுகளின் மூலமோ, அல்லது தனியாகச் சீடர்களுக்கு சொல்லிக்கொண்டிருக்கும் போதோ, சீடர்கள் அவற்றை எழுதிக்கொண்டு சுவாமிகளிடம் காட்டுவார்கள். அவர் அதைச் சரிபார்த்துத் திருத்திக் கொடுப்பார். இவ்வாறு எழுதப்பெற்று அச்சிடப் பெற்றவைதான் அவருடைய நூல்கள். சாத்திரங்கள் மூலமாகவும் அநுபவரீதியாகவும் சுவாமிகள் வேதாந்தத் தெளிவு பெற்றிருந்தார். ஆனால், பொருள் மிகவும் கடினமானதாலும், பெரும்பாலும் கருத்துக்கள் வடமொழி கலந்தவேதாந்த பரிபாஷையிலிருப்பதாலும் அதில் பயிற்சி உடையவர்கள்தான் அவற்றைப் படித்துப் புரிந்து கொள்ள முடியும். சுவாமிகள், அநேகமாக முன்னோர்கள் கருத்துக் களையும் சங்கர பகவத்பாதாள் தமது பாஷ்யங்களில் காட்டிய வழியையும் பின்பற்றினபோதிலும் காலத்திற் கேற்பச் சில புதிய அபிப்பிராயங்களையும் தெரிவித்திருக் கிறார். தமது சீடர்களுக்குத் தாம்பெற்ற தெளிவு ஏற்பட

வேண்டும் என்பதும், மக்கள் கடவுள் பக்தியில் ஈடுபட்டு கடற்சமாய் வாழ வேண்டும். என்பதும்தான் அவருடைய பெருநோக்கம். அவர்களுடைய மூன்று வேதாந்த விளக்க நூல்களில் (ஸ்வாநுபூதி ரஸாயனம், ஸவாநுபவ ரசமஞ்சரி, நிஜானந்த விலாஸம்), பிரம்ம கீதைக்குத் தத்துவராயர் செய்த மொழி பெயர்ப்புக்கு எழுதிய உரையிலும் இந்த நோக்கம் தென்படுகிறது.

## 1. ஸ்வாநுபூதி ரஸாயனம்

இது சுவாமிகளின் முதல்நூல் என்று முன்னமே குறிப்பிட்டிருக்கிறோம். 125 பக்கங்களடங்கிய இந்நூலில் 22 பிரகரணங்கள் அல்லது அத்தியாயங்கள் இருக்கின்றன. அதிலிருந்து சில நறுக்குப் பகுதிகள் வருமாறு: தொடக்கத்திலுள்ள செய்யுள் இது.

*தாரணியில் சாஸ்திரங்கள் அனந்தங் கோடி*
*தனித்தனியே பார்த்துணரச் சத்தியில்லார்க்[கு]*
*ஓர்ணியாய்த் திரட்டி வைத்தேன், இந்நூற்கு ஏற்ற*
*உத்தமர் யாரெனின், அவஸ்தை ஒரு மூன்றுக்கும்*
*பேரணியா யிருந்து அந்தக் கரண வாதைப்*
*பித்தேறா முத்தர்க ளாம், பேதையான*
*ஊரணியா மலநிறைந்த உடலை மெய்யென்[று]*
*உழலுவார் அன்று எனவும் உரைக்க லாமே.*

**பிரபஞ்ச உற்பத்தி**

ஏகமாய் எக்காலத்திலும் அழிவு இல்லாததுமாய் உள்ளது பிரம்மம் ஒன்று. அதனிடத்தில் அசைவற்ற ஆகாயத்தினிடத்தில் தோன்றிய வாயுவைப் போல சுத்தமாம் சத்துவ குணம் என்னும் மாயை தோன்ற, அம் மாயையில் சத்வ, ரஜ, தமோகுணம் என்றும் முக்குணத்தின் சமுதாயம் பொருந்திய ஜடசக்தியான பிரகிருதி ஜனித்தது.

அப் பிரகிருதியே, செய்கையின் பேதத்தால், ஆவரணசக்தி என்றும் விக்ஷேப சக்தி என்றும் இரண்டு பிரிவுடன் கூடி, சத்வகுணத்தை விழுங்கித் தான் மேலிட்ட தமோகுணத்தின் உண்மையான ஆவரண சக்தியால், பிராந்தியால் தோன்றிய சோபரத்தியாந் தாணுவின் மறைவுபோல், ஆத்மானிடத்தின் மறைதல் உண்டாய், சமஷ்டி பிரமாண்ட மாய்த் தோன்ற, கொஞ்சம் தத்துவத்தின் ரேகையுடைய ரஜோகுண மேலான ஸ்வரூபமுடைய விக்ஷேப சக்தியானது லிங்க சரீர முதலான வியஷ்டிகளின் பேதத்தைத் தோற்று வித்து, பிரம் மாண்டத்தை அலங்கரிப்பித்து நிற்க, அதை அவித்தை என்றும் விவகரிப்பார்கள். அதுவே சகலகஜத்துக்கும், ஜனன முதலான துன்பத்தைக் கொடுக்கும் போகத்துக்கு முதலாம்.

இவ்விதமான சக்திகளால் தோன்றுகிற சமஷ்டியான ஜகத்தை மூவித பேதத்தால் அபிமானித்தசைதந்நியம், விராட்டு, இராணியகற்பன், அந்தர்யாமி எனவும் பேதமுடையனவாம்.

அதில் விராட்டைக் கூறுமிடத்தில், சமஷ்டியில் ஸ்தூலசரீரத்தை அபிமானித்த சைதந்நியம், விரட்டாம். சூக்ஷ்ம சரீரத்தை அபிமானித்த சைதந்நியம் இரணிய கற்பனாம். காரணசரீரத்தை அபிமானித்த சைதந்நியம் அந்தர்யாமியாம்.

வியஷ்டியில் ஸ்தூல சரீரத்தை அபிமானித்த சைதந்நியம் விஸ்வனாவான். சூக்ஷமத்தை அபிமானித்த சைதந்நியம் தைஜஸனாவான். காரணத்தை அபிமானித்த சைதந்நியம் பிராஞ்ஞனாவான் வியஷ்டி, உடல் மூன்றுக்கும் அப்புறப்பட்டதாய் சகல திருஷ்டுவாய் விளங்குகின்ற சைதந்நியமே சாக்ஷியாகும். சமஷ்டி உடல் மூன்றுக்கும் அப்புறப்பட்டதாய்ச் சர்வ சம்பூர்ணமாய் விளங்குகின்ற சைதந்நியமே, சர்வசாக்ஷியான ஈஸ்வரன் ஆவான்.

இவ்விதமாக, முன் சொல்லிய சமஷ்டி, வியஷ்டியான உலகத்துக்கும் பஞ்ச பூதமே சாதனமாம். ஆவரணம் விக்ஷேபம் என்ற சக்தி அவித்தையாம். திரிகுணத்தின் சமுதாயமே மூலப்பிரகிருதியாம். இம்மூலப் பிரகிருதியுடன் கூடிய சைதந்நியமான ஆத்மாவிடத்தினின்றும், அவகாச ரூபமான ஆகாயம் உண்டாயிற்று. அதனின்றும் வாயு தோன்றிற்று. அதினின்றும் அக்கினி தோன்றிற்று. அதினின்றும் அப்பு தோன்றிற்று. அதினின்றும் பிருதிவி தோன்றிற்று. இதன் குணங்கள் சப்த, ஸ்பரிச, ரூப, ரஸ, கந்தம் என்கிற ஐந்து. பிருதிவிக்கு இந்தக் குணங்கள் முழுவதும் உண்டு. அப்புவுக்கு கந்தம் தள்ளி மற்ற நான்கு; அக்கினிக்கு கந்தம் ரஸம் தள்ளி மற்ற மூன்று; வாயுவுக்கு சப்தம் ஸ்பரிசம் என்கிற இரண்டு; ஆகாயத்திற்கு சப்தம் ஒன்றே.

இனி பஞ்சபூதத்தின் குறிப்பு: கடினமுடையது பிருதிவி; நெகிழ்ச்சியுடையது அப்பு; உஷ்ணமுடையது அக்கினி; சலனமுடையது வாயு; வெளியுடையது ஆகாயம். எலும்பு, தோல், ஸ்நோயு, ரோமம், மாமிசம் இந்த ஐந்து பிருதிவியின் விகாரமாம்; ரத்தம், மூத்திரம், சிலேட்டுமம், சுக்கிலம், மேதசு, இந்த ஐந்தும் அப்புவின் விகாரமாம்; பசி, தாகம், நித்திரை, ஆலசியம், ரதி, இந்த ஐந்தும் அக்கினியின் விகாரமாம்; நடத்தல், தாண்டுதல், ஏறுதல், இறங்குதல், தகைவுதல், இந்த ஐந்தும் வாயுவின் விகாரமாம்; காமம், குரோதம், மோகம், பயம், சோகம் இந்த ஐந்தும் ஆகாயத்தின் விகாரமாம்; காமம், குரோதம், லோபம், மோகம், மதம், மாற்சரியம், இந்த ஆறும் உள்ளத்தின் சத்துருவாகும்; ஜனிக்குதல், இருக்குதல், வர்த்திக்குதல், பரிணாமம், க்ஷயம், நசிக்குதல் இந்த ஆறும் தேகபாவங்களாம். அசனம், பிபாசை, சோகம், மேகம், ஜரை, மிருதி இவை வரூரூபிகளாம். தோல் எலும்பு, மாமிசம்,

ரத்தம், மேதசு, மச்சை, சுக்கிலம் இந்தத் தாதுக்களிடத்தினின்று தேக ரூபமான பிரபஞ்சம் ஜனித்தது.

இவ்வளவும் மாயையின் விகாரமானதால் அறிவற்ற ஜடமாம். இந்த ஜடமான ஜகத்தில் சிவமாம் சைதந்நியமானது பிரவேசித்து, அதன் சந்நிதான விசேஷத்நால், இந்த ஜகத்தும் சைதந்நியம் போலவே விளங்குகின்றது.

தேவர், மனிதர், பசு, பக்ஷி முதலான ஜடமான ஜகத்தினுள்ளே பிரவேசித்துநின்ற ஈசனை தெரிவிக்குதல் எப்படி எனின், உடல் முதலான சகலங்களையும், என் உடல், என் கண், என் மனம், என் புத்தி, என் சுகம், என் துக்கம், என் அகங்காரம், என் பெண்டு, என் பிள்ளை, என் பொருள், என் பூமி, என் ஜாக்கிரத்து, என் சொப்பனம், என் தூக்கம், என் சமாதி, என் ஜாதி, என் வர்ணம், என் ஆச்சிரமம், என் தர்மம், என் பாவம் என்று ஜடமான கடத்தைப் புருடன்போல விளங்கிப் பிக்கிற சகல ஜகத்தைப் பகுத்தறிந்த அறிவான சைதந்தியமே பிரம்மமாம். இதைத் திருக் என்று கூறுவார்கள். மற்ற சகலங்களையும் திருஸ்யம் என்று கூறுவார்கள்.

இந்த திரிசியமான தேகத்தை, நாம் என்றும், நமது என்றும் அபிமானிக்க ஜீவத்துவம் நேரிடும். அக்காலத்தில் அவன் உபதியையும் சுவாபத்தையும் தெரிய விபரம் எப்படி எனின், மூலப்பிருகிருதியில் உண்மை திரிகுணத்தின் சமுதாயமானதால், அவ்வித உபாதியுடைய சைதந்நியத்தில் ஆகாயாதிகள் ஜனித்தால், குணத்ரயத்தின் சுவாபம் அதை யுடையதாகும்.

அவ்வித பஞ்சபூதத்தின் சாத்வீக அம்சத்திலிருந்து அந்தக் கரணம் ஜனித்தது; அவ் அந்தக் கரணமே, விருத்திபேதத்தால் மனம், புத்தி, சித்தம், அகங்காரம் என்று நான்கு பேதத்தை அடைந்தது. இது அந்தர் இந்திரியம் என்று கூறப்படும்.

பாகி யேந்திரியங்களின் விபரம் எப்படி எனின், ஞானேந்திரியம் என்றும் காமேந்திரியம் என்றும் வகை

ஒன்றுக்கு ஐந்து வீதம் பத்தாகும். இந்திரியங்களின் உற்பத்தி ஆவன - ஆகாயத்தின் சத்துவாம்சத்தினின்றும் சுரோத்திரியம் ஜனித்தது. வாயுவின் சத்துவாம்சத்தினின்றும் த்வக்கு ஜனித்தது. அக்கினியின் சத்துவாம் சத்தினின்றும் நேத்திரம் ஜனித்தது. அப்புவின் சத்துவாம்சத்தினின்றும் ரசனை ஜனித்தது. பிருதிவியின் சத்துவாம்சத்தினின்றும் கிராணம் ஜனித்தது. சமஷ்டி பஞ்சபூதத்தின் ரஜோம்சத்தினின்றும் பிராணன் உண்டாயிற்று. ஆகாயத்தின் ராஜோம்சத்திலிருந்து வாயு உண்டாயிற்று. வாயுவின் ரஜோம்சத்திலிருந்து பாணி உண்டாயிற்று. அக்கினியின் ரஜோம்சத்திலிருந்து பாதம் உண்டாயிற்று. அப்புவின் ரஜோம்சத்திலிருந்து பாயுறு உண்டாயிற்று. பிருதிவியின் ரஜோம்சத்திலிருந்து உபஸ்தம் உண்டாயிற்று.

பூதங்களில் வாயுவான பிராணன் மாத்திரம் விருத்தி பேதத்தால், பிராணன், அபானன், வியானன், உதானன், சமானன் என்று ஐந்து பேதமாயிற்று.

ஸ்தூல, சூக்ஷ்ம, காரண, சரீரத்தின் வரலாறு - பூதம் 5, ஞானேந்திரியம் 5, கர்மேந்திரியம் 5, வாயு 5, கரணம் 4, ஆகிய 24 தத்துவம் கூடினது ஸ்தூலசரீரம் வாயு 5, ஞானேந்திரியம் 5, கர்மேந்திரியம் 5, மனம் 1, புத்தி 1, ஆக 17 தத்துவமுடையதாய் அபஞ்சீகிருத பூதத்தினின்று உண்டானது சூக்ஷ்மசரீரம். அதுவே சொர்க்காதி போகங் களுக்குச் சாதனமாம். தூக்கத்தில், ஒன்றும் தெரியாமல் தூங்கினேன் என்ற சொல்லால் அநுபவிக்கப்பட்ட ஒன்றையும் அறியாமையான அஞ்ஞான அநுபவமே காரண காரியமாம்.

இவற்றின் அவஸ்தையாவன ஜாக்கிரம், சொப்பனம், சுழுத்தி என மூன்றாம். அவற்றுள் ஜாக்கிரமாவது பாகி யேந்திரியங்களோடு கூடின ஸ்தூலசரீர விஷயமான

வியாபாரமாம். சொப்பனமாவது மனதின் வாசனா ரூபமான ஜகத்தின் பிர்விருத்தியாம். சுழுத்தியாவது, புத்தி முதலான சகலகாரணங்களும் லயித்து தன்னறிவை மயக்கா நின்ற தூக்கமான அஞ்ஞான அநுபவமாம். இந்த மூன்று சரீரத்தையும், சாக்ஷியான ஆத்மாவுக்கு கிரீடையடையும் பொருட்டானதால் மூன்று புரமாகக் கூறப் பெறும்.''

**கர்மத்ரய வரலாற்றுப் பிரகரணம்**

''முக்தர்களுக்கு ஆகாமிய, சஞ்சித, பிராரப்த என்ற மூன்றுவிதமான கர்மங்களும் இல்லை என்றும், சிலர்கள் பிராரப்தம் மாத்திரம் உண்டு என்றும் அங்கீகரித்திருப்பதின் தாத்பரியம், ஸ்வாநுபூதி வந்ததின் பிறகு, கருதியுக்தி அநுபவங்களினால் இனி ஜன்மம் கிடையாது என்ற உறுதித் தன்மையினால், ஆகாமியம், சஞ்சிதம் இரண்டும் ஞானிகளுக்கு இல்லை. ஸ்வபாவரீதியாய் பிராரப்தம் நிரூபிக்கத் தகாததாய் இருந்தபோதிலும், பிரத்தியக்ஷமாய் விவகாரத்தில் காணப்படுவதால், உடல் நாசபரியந்தம் பிராரப்த போகம் அங்கீகரிக்கப்படுகின்றது. அப்படி அங்கீகரிக்கக் கூடாதென்றும் நிஷேதிக்கப்படுகிறது.

எப்படியெனின், மூன்று ஸ்திரிகள் ஒரு புருஷனுக்குத் தாரங்களாயிருக்க, அந்தப் புருஷன் மரிக்கில், இருவர்கள் அமங்கிலியாயிருக்கிறார்கள் என்றும், ஒருத்தி சுமங்கிலியா யிருக்கிறாள் என்றும் எப்படிச் சொல்லக்கூடாதோ, அப்படியே ஒரு ஜீவனைப்பற்றி அங்கீகரித்த மூன்று கர்மங்களில், அந்த ஜீவதிசை நீங்கிய முன் இரண்டு கர்மங்களை நீக்கி, பிராப்தத்தை மாத்திரம் அங்கீகரிக்கப் படுகின்றது.

மேலும், சுருதயில் சகல கர்மங்களும் உண்மையை அறிந்தபின் க்ஷயித்திடும் என்ற அனுக்கிரகத்திற்கு

விரோதப்படவும் செய்திடும். இப்படி பிரகரணத்திற் சங்கராச்சாரியர்கள் சொல்லியிருக்கிறார்கள். நான் பிராப்தத்தை ஒப்பியது சிஷ்யபுத்தியையே அபேஷித்தே யன்றி எனது அபேஷையாய்ச் சொல்லவில்லை. ஸ்வபாவமாய், பிராரப்தம் ஒப்பிடில் சுருதியின் அபிப்ராயத்தை வஞ்சித்துப் போதிப்பிக்கிறவர்களாவார்கள் ஆனால், முக்தர்களுக்கு ஆகாமிய, சஞ்சித, பிராரப்தங்களும் இல்லை என்பதே இந்நூலின் தாத்பரியம்."

**சமாதியில் மனோவிருத்தியின் சோதனை**

"சமாதியில், சாமியம், லயம், விநாசம், அத்தியத்தர்பாவம், ஐக்கியம் எனும் ஐந்து வகைப்படும். சாமியமாவது, சமமாய் நீரும்பாலும் கலந்து நின்றாற்போல, ஜீவோபாதியானது அகண்ட பிரமோபாதியிற் சூக்கும திரிபுடிய தாகக் கலந்து நின்றதாம். லயமாவது அந்த சூக்கும திரிபுடியும் லயித்து அகண்ட பிரமோபாதி மாத்திரமாய்த்தனித் ததுவாம். விநாசம் என்பது பிரத்வம்சம் என்னப்படும். எக்காலத்திலும் அகண்ட விருத்தி மாத்திரமாய் நிற்க, தனக்கு முன்னமே ஸ்வபாவமாய்க் கண்ட மனம் இருந்தும், இப்போது விஷயத்திற் சொல்லாததனால், சமாதி பலத்தால் இருந்த மனம் இறந்து போனதாய்க் கொள்கின்றதாம். அத்தியந்தர் பாவமாவது சுவபாவமாயிருந்த அகண்டமான பிரமபோதத்தைத் தவிர ஜீவபோத முக்காலத்திலும் இல்லவே இல்லை எனக் கொள்கின்றதாம்.

ஐக்கியமாவது பிரமபோதம் என்றதும், ஜீவபோதத்தை முன்னிட்டே சித்திக்கின்றதாகத் தோன்றுகின்றது. கண்டமான சிவபோதத்தை விளங்குவித்து நின்றபோதிலும், பூரணமாகத் தகாது. ஜீவபோதம் இரண்டும் போதரூபமாய் ஒன்றுதான். அந்தப் போதம் இருந்திடினும் நசித்திடினும்,

நிரபேக்ஷமாய் எக்காலத்திலும் ஒன்றுபோலவே உள்ளபடி போதாதீதஸ்வபாவமாய் விளங்கி நிற்கின்ற 'தெனக்கூடச் சொல்லத்தகாது. இதனிடமாய் பிரம்மஜீவன் என்ற விவகாரமாவது, விவகாரத்தைவிட்டு வந்த அநுபூதியாவது, வந்தியா புத்திரனென நிஷேதியாமல், நிஷேதிக்கின்றது.

முன் சொன்ன நான்குவித சமாதியுடையவர்களும், அவஸதாத்திரயத்தில் சாக்ஷிவிருத்தி ஞானத்தையே, பிரத்யேகாத்மா என அறிந்து, சமாதி பலத்தால் கண்ட பிரம்ம விருத்தி ஞானத்திலடங்கி, அந்த பலத்தால் ஜீவோபாதியை நிஷேதித்தார்கள். ' ஐந்தாவான் தன்னிடத்தில் தன் சுபாவத்தால் நிஷேதியாமல் நிஷேதித்தான்; இவன் ஒருவனே உள்ளபடி தெளிந்தவன்.

சிலர்கள், ஞானம் அடைந்ததின் பிறகு. மோன சமாதியில் அடங்கியே வெகுவருஷம் இருந்து போனார்கள். சிலர்கள் அதிவிஷயிகளாக இருந்திருக்கின்றார்கள். சிலர்கள் விஷயி களாகவும் ஒடுங்கினவர்களாகவும் இருந்திருக்கின்றார்கள். இதில் எவர்கள் பெருமை ஞானமுடையவர்கள் என்றும், காரணம் ஏதெனவும் விபரம் - பிரமானந்தமய கோசம் எனும் ஆனந்தாதீத ஸ்வய மானந்தம் எனும் பிரமசுகம் இரண்டு பேதமுடையதாகும். விவகாரத்தால் கீழ்ச்சொல்லிய நான்கு பேதமுடைய சமாதிமான்களும் பிரமானந்தமய கோசத்தில் அடங்கி நின்று, அந்த ஆனந்தத்தாற் சிவபோதம் விழுங்கப் பட்டிடில், விஞ்ஞானமய கோசமானது சுழுத்தியாம் ஆனந்தமய கோசத்தில் அடங்கி நின்றதுபோல, பிரமானந்த மய கோசத்தில் அடங்கிவிடுவார்கள். மற்றொருவன் ஸ்வயமானந்த ரூபனானதால் அநுபூதி நிரபேக்ஷன். அவன் சமாதியில் அடங்கி நிற்கவும் மாட்டான். அவன் சமாதியில் அடங்கியது அடங்கியதும் அல்ல. அவன் செய்கின்ற பிரவிருத்தி விரவிருத்தியுமல்ல. அவனிடத்தில் சமாப்த

பிராப்தம் என்றும், அசமாப்த பிராப்தம் என்றும், மினித பிராரப்தம் என்றும் அந்நியர்கள் விவகாரத்தால் மூன்றுவிதமாய் விவகரிப்பார்கள்.

ஸ்வயமானந்த ரூபனாயிருந்த போதிலும், பிராரப்தம் சமாப்தமாயிருப்பதால், தேகம் தவிர மற்ற சேஷ்டை அவனிடத்திற் காணப்படாது. அசமாப்த பிராரப்தன், தானான ஸ்வயமானந்த ஸ்வரூபத்தைத் தவிர வேறு வஸ்துக்களை எதிரிடாமலிருந்த போதிலும், பிராரப்தம் அசமாப்தமாய் இருப்பதால், அவனிடத்தில் சகல போகங்களும் காணப்படும் மனித பிராரப்தவானிடத்தில் பாதிக்காலம் சமாதியும், பாதிக்காலம் விஷயபோகமுமாகக் காணப்படும். ஸ்வயமானந்த ரூபாளான இந்த ஞானிகளுக்கு சமாதி சாதனமுமல்ல, விஷய போகம் விரோதமுமல்ல. சாதனம் விரோதம் எல்லாம் அவர்களுக்குத் தானான ஆனந்தமாகவே விளங்காமல் விளங்குகின்றன. மாணாக்கன் அப்படியே தெளிந்து ஸ்வய மானந்த ரூபனானான்.''

#### கூடஸ்தனது தன்மை

''இவ்விதமாய் சுருதி யுக்தி அநுபவங்களோடுங் கூட உள்ளபடியறிந்து சமாதி செய்ய, ஸ்வாநுபூதி பலத்தால் முக்தனாவான். மேன்மேலும் ஸ்வாநுபூதி பலத்தால் முக்தன் என்ற விவகாரமும், பெத்தன் என்ற விவகாரத்தால் வந்ததால் முக்காலத்திலும் நம்மிடத்தில் பந்தம் வராமலிருக்க, முக்தியும் சமாதிபலத்தால் ஞானமும் நீங்கினது போல, நீங்காமல் நீங்கிவிடும்.

கூடஸ்தனது சுவாபம் அவஸ்தை மூன்றிற் கண்ட சகலஜகத்துக்கும் சாக்ஷியாயிருந்தது போல, சகுணேஸ்வர த்யானம், நிற்குண பரிபூரண த்யானம், அதற்கும் சாக்ஷியாய் நின்ற பூரணத்துக்கும் பூரணமான பார்வை; அந்தப்

பார்வையும் நீங்கிய விருத்தியில்லாத ஸ்வாத்மநுபவ ஸ்திதி இவ்வளவும் கூடஸ்தனான தன்னால் விளங்குவதால், ஜாக்கிரமுதல் அதீத சமாதி வரையிலும் தானே நிர்விகார கூடஸ்த ஞானத்தால் அறிந்தவன் ஆகின்றான்.

இவ்வித கூடஸ்த ஞானம் இல்லாமல் போனால், நமக்கு அவஸ்தாத்திரையும் சித்தியாகாதது போல், ஈஸ்வரனுக்கும் சிருஷ்டி, ஸ்திதி, சம்ஹாரம் சித்தியாகா. கூடஸ்தன் நிற்குணனாதால் நிர்விசேஷனாவான். நிர்விசேஷனிடத்தில் விசேஷம் ஒப்பக்கூடாது. சுருதி, யுக்தி அநுபவங்களினால் எங்கும் கூடஸ்தன் வியாபித்திருப்பதாய்த் தெரிவதால், வீடுகள்தோறும் வியாபித்த ஆகாயத்தை, ஒருவராலும் என் வீட்டு ஆகாயம், உன் வீட்டு ஆகாயம் என்று பேதித்துப் பின்னமாகச் செய்ய உபகாரப்படாததுபோல, பேதிக்க உபகாரப் படான்.

சிருஷ்டிக்கு முன்னும் பின்னும், பிரளயத்துக்குப் பின்னும் அழியாமலிருந்து, இம் மூன்றையும் அறிந்தவனே கூடஸ்தப் பிரமமாவான் அவ்விதத் தத்பத கூடஸ்தனுக்கும் அவஸ்தாத்ரய ஸாக்ஷி சை தந்நியமாயும், கூடஸ்த ஸ்வபாவமாயும் இருக்கிற நமக்கும், சாக்ஷி ரூபமாயாவது ஞானரூபமாயாவது பேதம் நிருபிக்கத் தகாததனால், பேதமற்றது ஏகமானதால், அவ்வித ஏகனான நம்மைத்தவிர, முக்காலத்திலும் அன்னியமில்லை யென்று தெரியாமல் தெளிய, அக்கணமே உண்மை வெளியாம். இவ்வித உண்மையை அடைந்தவனைச் சுருதிகள் பிரமம் என்று மங்கள பேரிகை அடிக்கின்றன.''

## 2. ஸ்வா நுபவ ரஸ மஞ்சரி

இந்த நூலிலும், சுவாமிகள் வேதாந்த விஷயங்களைப் பொருளாகக் கொண்டு பல ஆழ்ந்த கருத்துக்களையும்

நுட்பமான விஷயங்களையும் விளக்கியிருக்கிறார். நூலின் நடையும் முந்தியதில் உள்ளது போலத்தான். இதிலும் 22 பிரகரணங்கள் உள்ளன. அவைகளில் இருந்து எடுக்கப்பெற்ற சில நறுக்குப் பகுதிகளாவன!

**சரியாதி நிந்தா நிஷேதனப் பிரகரணம்**

"சர்வக்ஞனாயும் சர்வ வல்லமை உடையவனாயும் சர்வ தயாபரனாயும் இடைவிடாத் தன்மையாய் எங்கும் உள்ளவனாயும் ஈக்கள் மதுவைப் போல எம்மதத்தோரும் என் கடவுள், என் கடவுள் என்று குவிந்து சார்த்திடத்தக்க ரசக்கடலாயும் உள்ள சர்வநாதனாகிய கடவுளை, சரியை, கிரியை, யோகம் இம்மூன்றின் சமரசப் பெருமையால், அவனது அநுக்கிரகத்தை ஸ்துதித்து ஞானானந்தக் கடலில் மூழ்குதலின் விபரம்;

சரியை கிரியை இவ்விரண்டும் கர்மகாண்டத்தின் உபகாரணமானதால், அக் கர்மகாண்டத்தில் யாகாதி கிருதுக்களென்ன, ஆலயாதி ஈஸ்வர விஷய கிருதுக்க ளென்ன இவ்விரண்டிலும் குண்ட மண்டக வேதி முதலாகிய நிர்மாணம் சரியா ரூபமானதால், அச் சரியா விஷயத்தில் கிரியை என்ற உபாசனை சாத்தியமானதால், அவ்வித உபாசனை ஈசனை முன்னிட்டு விளங்குவதால், அவ்வித ஈசனைத் தெரிய ஜீவர்களுக்கு வல்லமையில்லாததினால், அதி மூடமாயுள்ள இந்த ஜகத்திற்கு அதிலகுவாக ஈசனை அறியும்பொருட்டு அக்னி சிவலிங்காதிகளில், சாஸ்திரங் களால் சர்வ வியாபகமான ஈசனை மந்திரங்களால் பாவித்து உபசரித்திட, அவனது பிரசாதத்தால் அவனது சுபாவம் தெரியக் கூறுதல்."

"லிங்கம் அக்னி முதலானவைகள் ஜடங்களாய் இருந்த போதிலும், அவைகளில் பாவிக்கப்பட்ட ஈசன் சித்து ரூபன்

ஆதலால், அவைகளில் செய்யப்பட்ட உபசாரங்கள், நித்ய திருப்தன் ஆகிய தனக்கு ஒரு உபகாரமும் இல்லாமல் போனாலும், ஜகத்தில் மகாதனம் பொருந்திய மஹாராஜ்ய ராணி அவர்களுக்கு ஜகத்தால் ஒரு பிரயோசனம் இல்லாமல் போனாலும், ஜடமாயுள்ள இவர்களது முத்திரைக்குச் சகல இந்து ஐரோப்பியர்களும் வெகு திரவியச் செலவுடைய உபசாரத்தை அதிவணக்கத்துடன் செய்ய, அவ்வித உபசாரத்தால் அவர்களது கருணைக்கு இவர்கள் பாத்தியப்படலாம் ஆயின், சர்வக்ஞனாயும் சர்வ வியாபகனாயும், சர்வ தயாபரனாயுமாய் இருக்கின்ற ஈசனது கருணையின் பொருட்டு, மேற்சொன்ன சிவலிங்காதிகளில் பாவனையாலும் உபசரிக்கப்பட்ட ஈசன், அவர்களின் பொருட்டு ஏன் கிருபை செய்யமாட்டான்?''

''ஈசனையே தெரியாத இந்த ஜகத்துக்கு ஆலயம் யாகசாலை இவற்றைக் கண்டவுடன் ஈசனது யாது உண்டாவதால், அதுவே முந்தின கைகண்ட பிரயோசனம். அப்படி ஈசனது யாது வரும்போது அவனை சர்வவல்லமை உடையவனாயும், தன்னை ஒன்றும் தெரியாதவனாயும், உனக்குள் நான் அடக்கம் என குளிர்ந்திடும்படி செய்து அகங்காரத்தை நீக்கியது இரண்டாம் பிரயோசனம். மேலும், சாஸ்திராதிகளால் விவேக முடையவர்களுக்கு மாத்திரம் சர்வ வியாபகமாய் அரூபமான பரம்பொருள்கள் இருக்கின்றதாக அறியப்படும். அவ்வித அறிவால் உள்ள உபகாரம் நாதன் ஒருவன் இருக்கிறான் என்ற எண்ணத்தை உண்டாக்குகின்றதைக் காட்டிலும் வேறு உபகாரத்தைக் காணவில்லை. அவ்வித கலைகள் அவனை மறந்திடில் உபகாரப்படுவதுபோல் இவ் ஆலயாதிகளும் ஈசனைத் தெரிந்தவன் தெரியாதவன் யாவர்களுக்கும், தங்களது அகங்காரத்தை நீக்கி ஈசனது யாதை உண்டுபண்ணிக் குவிந்து வணங்கிடச் செய்விக்கின்றது. ஆகையால், 'கல்விகள்

வித்வான்களுக்கு மாத்திரம் உபகாரப்படும்; ஆலயாதிகள் யாவர்களுக்கும் ஈசனைத் தெரிவிப்பதற்கு உபகாரப்படும் இது மூன்றாம் பிரயோசனம்.''

"அன்றியும், இவ்வித ஆலயாதி தோறும் ஈசனை வணங்கிய பெரியோர்களுக்கு வெகுவித நன்மைகள் கிடைப்பதால், இப்போதும் கிடைத்து வருவதால், அப்படியே சாஸ்திரங் களும் வெகு பெருமையாகச் சொல்வதால், அவனை சரியை கிரியையாதிகளால் அகத்தியம் வணங்க வேண்டும். "............." அவ்வித வேதங்களில் சொல்லிய நாதனை உள்ளத்திலும் அறிய வேண்டுமெனக் கூறிய சாஸ்திரப்படி கரண கலவிகளை யோகத்தில் அடக்கி, உள்ளத்தில் ஈசனை தரிசிக்க வல்லமை உடையவர்களான யோகியர்களுக்கு, அவ்வித வல்லமை இருப்பதால் அவர்களுக்கு உள்ளத்தில் நாதன் இருக்கிறான் எனக் கூறியது. ஈசன் எங்கும் இருக்கிறான் எனக்கூறிய ஞான சாஸ்திரப் பிரகாரம் ஈசன் எங்கும் இருக்கின்றதாக அறிய, கடவுளது கருணையை அடைந்த ஞானியர்களால் எங்கும் ஈசனை அறிய உபகாரப்படுமானதால், அவர்களுக்கு எங்கும் இருக்கிறான் எனக்கூறியது, வேத மந்திரங்களை அப்யாசிக்க வல்லமை இல்லாதவர்களாயும், அதில் அதிகாரம் இல்லாதவர்களாயும், உள்ளத்தில் ஈசனைத் தரிசிக்க வல்லமை இல்லாதவர் களையும், எங்கும் ஈசன் இருக்கின்றதை அறிய வல்லமை இல்லாதவர்களாயும் இருக்கின்றவர்களுக்கு விக்கிரக முதலியவைகளில் ஈசன் இருக்கிறதாகக் கூறியதில், அவர்களை அற்ப புத்தி உடையவர்கள் என்று கூறப்பட்டிருக் கின்றதாகக் காணப்படுகின்றது. இதின் தாற்பரியம், அக்னியிலும் உள்ளத்திலும் எங்கும் இருக்கின்ற நாதனை, பிம்பாதிகளில் மாத்திரம் இருக்கின்றதாக ஒப்பிய புத்திய அபேக்ஷித்தே அன்றி, அவ் விக்கிரகாதிகளில் ஈசன்

இருக்கின்றான் என ஒப்பிய புத்திய அபேக்ஷித்துக் கூறினதல்ல.......... "மேலும் சமயங்களே பலனைக் கொடுக்குமா? ஒரு எஜமானனுக்குப் பாத்தியப்படாத ஒரு காட்டில் ஒருவன் வேலை செய்யின் அவ்வேலையே அவனுக்குச் சம்பளம் கொடுக்கத் தகாததுபோல, சமயங்கள் தானே பலனைக் கொடுக்கத் தகாது. ஆகையால், எச்சமயத்தோருக்கும் நாதனே பல தாதாவாக (பலனைக் கொடுப்பவன்) காணப்படுவதால், எச்சமயத்தார்களும் அந்த நாதனைக் குறித்து உண்மையுடன் ஸ்துதி செய்ய வேண்டும் அன்றி, நாதன் அடியவராகிய எச்சமயத்தோரையாவது, எச்சமயத்தோராயினும் நிந்திப்பார்களாகில், அவர்கள் நாதனையே நிந்தித்தவர்கள் ஆவார்கள்."

"ஆலயாதிகளில் விக்கிரகாதிகள் மூலமாக ஈசனை பாவித்து நம்பி வணங்கிவருவதில், விக்கிரகாதிகள் பின்னப்படும்போது ஈசனும் அழிவுடையவனோ என்று சங்கிக்க காரணமில்லை. விக்கிரகாதிகளையே நாதனாக நம்பி இருந்திடில் அது சரி. ஒரு அரசனது தேகத்தை முன்னிட்டு சகல ஜனங்களுக்கும் அரசன் என்ற அதிகாரத் திற்கு த்குந்த உபகாரம் செய்ய நம்பிக்கைவந்திருந்திடினும், அவ்வரசனது தேகம் நீங்கின காலத்து அவ்வரசனது அதிகாரம் மற்றொரு தேகத்தை முன்னிட்டுங் காணப்படுவது போல, நாதனது உபாசனையும் மற்றொரு விக்கிரகாதிகளை முன்னிட்டுச் சிந்திக்கத் தகலாம்."

**பஞ்சாக்ஷர மகிமை உரைத்த பிரகரணம்**

"பஞ்சாக்ஷரமானது சூக்ஷமம், மத்திமம், ஸ்தூலம் என்று மூன்று வகுப்புடையதாம். 1.(பஞ்ச) விஸ்தாரமாகி அட்சரம் நாசரகிதப் பொருள். 2. (பஞ்ச) நாடோறும் பிரத்தியக்ஷ மிருத்துவாய் விளங்கிய சகல ஜகத் ஞான ரூப சுழுத்தியிற்கூட

(அட்சரம்) அபாதீத சுபாவமுடைய நாசரகித ஆன்மப் பொருள். 3.(பஞ்ச) பஞ்சகர்த்தாக்கள் என்ன, பஞ்சகிர்த்தியங்கள் என்ன, பஞ்சபூதங்கள் என்ன, இருவகைப்பட்ட பஞ்சேந்திரியங்கள் என்ன, பஞ்சாவஸ்தைகள் என்ன, இவைகளில் (அட்சரம்) ஐந்து பேதமுடையவை போல பிரதி பிம்பித்து விளங்கிய விருத்தி சைதந்நியம் எனப்படும். இவற்றை உள்ளபடி போதிப்பிக்குந் திறமை ஐந்தெழுத்துக்கு இருப்பதால்; வாச்சிய வாசகர்களுக்கு அபேத்தன்மையானதால், இதையும் பஞ்சாட்சரம் எனக் கூறியது.''

''ஆனால், ஜபகாலத்தில் இப்பஞ்சாட்சரத்தில் அப்பொருளுடைய பரமசிவம் அநுப்பிரவேசித்து விளக்குகின்ற தன்மை அறியப்படுமாயின், அந்த அதிகாரியின் பொருட்டு அதுவே பரமசிவம் என்ற திருப்தியை கொடுக்கமாட்டாது, திருப்திதானாகவே செய்விக்கும்...''

''பஞ்சாட்சரம் என்பது சிவாயநம என்னும் ஐந்து எழுத்துக்களேயாம். இவற்றின் பெரு நோக்கமாவது சகல நிஷ்கள ரூபமாய் விளங்கிய சர்வக்ஞ பரமசிவத்தின் பொருட்டு ஜீவனது வணக்கம் எனலாம். எவ்வாறெனில் தேக அபேக்ஷயால் தாசன் எனவும், ஜீவ அபேக்ஷயால் கடலில் ஒரு திவலைபோல் அம்சம் எனவும் கூடஸ்தபுத்தியால் அப் பரமசிவத்தை தவிர நான் என்பது வேறு இல்லவே இல்லை எனவும் ஆகின்றன.''

''தாத்பரியம் வணக்கம் என்பது, ஒன்றில் மற்றொன்று அடங்குவது. அதாவது மாயையால் தோன்றிய சீவேச பேதத்தை சுருதி யுக்தி அநுபவங்களால் நீக்கி சேஷித்த ஏகபாவமாம் சிவஞான மாத்திரமாய் விளங்குதல்தான்.''

''இனி, அவ்வட்சரத்தின் பொருள் விவரம் (சிவ) சச்சிதானந்தம்; அவ்வித சச்சிதானந்த சுபாவமாகிய (ம) எனக்கு, (ந) இல்லை, கூட்டவும் தள்ளவும் தக்கதான

இரண்டாம் பொருள் (ய) பிரயோசனமில்லை. இன்னும் (நம) என்பதில் (ந) இல்லை; என்ன இல்லை (ம) அஞ்ஞானமாம் சுழுத்திரூப ஆவரணம் என்ன, அதின் அபிமானியாம் பிரக்ஞை என்ன, இவைகள் யார் பொருட்டு? சிவாய அகண்ட சச்சிதானந்தமாகிய பரமசிவ சொரூபத்தைத் தவிர, வேறு துவிதத்துக்கு இடையில்லாததினால், துரியமான ஆன்மாவின் பொருட்டு என்பதாம்.

**சாது சங்க மகிமை உரைத்த பிரகரணம்**

சாது என்பபடுகின்றவர்கள் எப்பொருள்கட்கும் அப்பொருள்களாய் விளங்கிய கருணைக் கடலாம். பரம சிவ சைதந்நியம்போல சகல பொருள்கட்கும் அபயமாய் விளங்கிய சுபாவ முடையவர்களாயும், ஆப்தகாமனாயும், உத்தம அதிகாரிகளுக்குத் தரிசன மாத்திரத்தில் அகண்ட பரமசிவானந்த அநுபூதியை விளங்குவிப்பிக்கிறவர்களாயும், தங்களை அநுசரித்த எவ்வதிகாரிகளையும் அவர்களது சித்த பரிபாகத்துக்குத் தகுந்தபடி சாதனங்களை அருளிச்செய்து பரமசிவானந்த சமுத்திரத்தில் குளிக்கச் செய்விக்கிற வல்லமை உடையவர்களாயும், எப்போதும் எவர்களுக்கும் சல்லாப மாத்திரத்தில் பரம சிவப் பிரேமா வர்த்தர்களாயும், மொழியு மொழிகளால் எல்லாம் துவித வாசனா பீசமான அகங்காரக் கிரந்தியாம் இருளைச் சிதையச் செய்யும் பொருட்டுச் சிவஞான சூரியப் பிரகாசத் தன்மையைப் பிரகாசிப்பிக்கிறவர்களாயும், பிராணிகளிடத்தில் யாதொரு அபேக்ஷையுமில்லாமல், அவர்கள் வீடடைந்து உய்வதின் நிமித்தம் கிருபை கூர்பவர்களாயும், கருணை மைத்திரி முதிதை உபேக்ஷை முதலிய சீலம் பொருந்தினவர்களாயும், துவந்துவ விநிர் முக்தர்களாயும், எப்பொழுதும் சிவாநுபூதியில் இரண்டாம் பொருளை எதிரிடாதவர்களாயுமுள்ள

பெரியோர்களாம். அவர்களது சங்கம் சாதுசங்கம் எனப்படும். இவர்களது சங்கத்தைத் தவிர பிராணிகளுக்கு வீடடைய வேண்டிய மார்க்கம் வேறில்லை என்பதே வேத ஆகமங்களின் முடிவான நிர்ணயமாம்.''

''ஸ்ரீ பரம தயாபரர்களாகிய சங்கராச்சாரியர்களது வர்க்கினாலேயே, உத்தம ஜாதியில் குரு அகப்படாவிட்டால், எந்த ஜாதியிலாகிலும் பந்தம் தீர உபகாரப் படுமாகில், குருத்துவம் ஆசரிக்கப்படலாம் என்று மொழிந்திருப்பதும் தவிர, எவனது அருளால் ஜடமான தேகமுதல் அனைத்தும் சித்துப்போல் விளங்குகின்றதோ எவனது சுபாவமாக கீடாதி பிரமபரியந்தம் காக்ஷித் தன்மையாய் விளங்கியதோ, யாதொரு பொருள் எல்லாரும் நான் என்னும் தன்மைக்கு ஒரே இயல்பாக உரித்தாயுள்ளதோ, அப் பொருள் யான் என திடாநுபூதி உடையவர்களாயின், அவர்கள் ஜகதிருஷ்டியில் சண்டாளராய் காணப்பட்டிடினும் அவர்களை குரு எனவே நம்புதல் என்னுடைய கருத்து என்று, அவர்களாற்றானே கூறப்பட்டிருப்பதாயும் காணப்படுவதால், அவர்களது அபிப்பிராயப் பிரகாரம் கூறியதாம்.''

**காசியின் மகிமை**

''அவிமுக்த ஸ்தலம் எனப்பட்ட காசி ஷேத்திரத்தில் மரணம் அடைதலானது, அத்துவித ஞானம் எப்படியோ அப்படியே மோக்ஷத்திற்கு முக்கிய சாதனமாக இருக்கின்றது.''

''ஞானம்தான் மோக்ஷத்திற்கு முக்கிய சாதனம் என்று சகல சாஸ்திரங்களும் கூறியிருக்க, காசி மரணம் சாதனமாதல் கூடுமா என்னில்? காசி மரணத்தால் ஞான முண்டாகி சகலமும் மோக்ஷத்தை அடைகின்றன என்று சுருதியில் கூறப்பட்டிருப்பதால், கூடும்.''

"சிரவணன மன நிதித்தியாசன தியாந தாரண சமாதியின்றிக் காசி மரணத்தினால் ஞானம் எப்படி உண்டாகும்? சுருதிகளில் சத்ய சங்கற்பனாய்த் தெரிய வருகிற ஈசனே காசியில் மரணகாலத்தில் சகல பீபீலி காதி பிரம பரியந்தமும் ஞானோபதேசம் செய்து மோனை ஸ்வரூபமான தன் சுபாவத்தில் ஐக்கியம் செய்கிறோம் என்னும் பிரதிஞ்ஞாவானாய்ச் சுருதியில் காணப்படுவதாலும், அவ்வித ஈசன் தன்னால் கற்பிக்கப்பட்ட ஜகத்தில் பிராணிகள் உள்ளத்தில் ஜீவரூபமாயும் கூடஸ்த பிரமரூபமாயும் அநுப்பிரவேசித்திருப்பதாலும், அவ்வித ஈசன் காசியில் பிராணிகளில் மரணகாலத்தில் அவைகளின் இந்திரிய வல்லமை மனதிலும், மனதின் வல்லமை புத்தியிலும், புத்தியின் வல்லமை அந்தக்கரணத்திலுமாக ஒடுங்கும்போது, தனது சத்தியப் பிரதிஞ்ஞையாம் அருளால், அநத்க் கரணத்தில் சேஷித்து நின்ற சிவனைக் கூடஸ்தனாக விளங்குவித்துத் தன்னைத்தவிர வேறு இல்லாதவகை கொண்டு மோக்ஷ பதவியை அருளிச் செய்கின்றான்."

"மேலும் ஈசனது திருவருளால் மோக்ஷ பதவியை அடைந்த பிரம நிஷ்டர்கள், தங்கள் பார்வையால் மற்றொரு சீவனுக்கு சிரவணாதி உதவியின்றி மோக்ஷ பதவியை அருளிச் செய்யலாமாயின், சர்வ வல்லமை உடைய அவ் ஈசன் சிரவணாதி உதவி இன்றி சீவர்களுக்குக் காசி மரணத்தில் மோக்ஷ பதவியை ஏன் அருளிச் செய்யத் தகான்?"

## 3. நிஜானந்த விலாசம்

*200* பக்தர்களுக்கு மேலுள்ள நிஜானந்த விலாசம் சுவாமிகளின் கடைசி நூல். அவர் இறுதிக்காலத்தில் அரிமளத்தில் இருந்த போது, மகாவாக்கியார்த்தப் பிரகரணமும், வேதாகம சம்ப்ராதயப் பிரகரணமும்,

மனோநாச மார்க்கப் பிரகரணமும் சொல்லி எழுதச் சொல்லி, அவற்றை திருநெல்வேலிக்கு அனுப்பி, முன்னர் இயற்றிய நிஜானந்த விலாசத்துடன் சேர்த்துப் பிரசுரிக்கக் கட்டளையிட்டார். அவ்வாறே செய்யப்பட்டது. இந்த நூல் பேராசிரியர் சுந்தரம் பிள்ளையால் பதிப்பிக்கப் பெற்றதால், இதன் தமிழ்நடை முன்னுள்ள நூல்களிருப்பதைவிட கொஞ்சம் லகுவாயிருக்கிறது. அதனுடன் சேர்க்கப்பட்ட அரும்பதவுரையும் வாசகர்களுக்கு நூலை புரிந்துகொள்ள உதவும். இந்த நூல் குரு சிஷ்ய சம்வாதமாக அமைந்திருக்கிறது. இதில் மகாவாக்கிய ப்ரகரணத்துடன் 14 அத்தியாயங்கள் இருக்கின்றன. சில ஷ்டதரிசனங்களைச் சேர்ந்த மீமாம்சை சாங்கியம் ஆகியவைகளைப் பற்றியவை. ஒன்று பௌத்த மத்தைப் பற்றிய பிரகரணம். அது கீழே கொடுக்கப்பட்டிருக்கிறது.

**பௌத்த மதம்**

"மாணாக்கன்: ஆசிரியர் உரைத்தருளிய பிரகாரம் மேற்கூறிய மதங்கள் (சாங்கியம் முதலிய) சங்கேத பேதத்தால் வெகு பேதமுடையவையாய்த் தோன்றினும், ஆராய்ந்து அறியுங்கால் அத்துவைத சித்தாந்தமாகிய ஒன்றே அவற்றின் உட்கருத்து என உணர்ந்து புறமதங்களின் கொள்கையும் அறிய அவா உற்று பௌத்தமத சம்பிராதயத்தை அருள்செய்ய வேண்டும் என்ற படிபணிய!"

ஆசிரியர்: பஞ்சஸ்கந்தமெனவும் க்ஷணிக விஞ்ஞானம் எனவும் ஆலைய விஞ்ஞானம் எனவும் சில சங்கேதம் இம்மதத்தில் உண்டு. பஞ்சஸ்கந்தம் என்பது ஞானேந்திரிய பஞ்சகமாகும். க்ஷணிக விஞ்ஞானம் என்பது க்ஷணே க்ஷணே உண்டாய் மறையாய் நின்ற புத்தியாகும். ஆலைய விஞ்ஞானம் என்பது தீபத்தில் உண்டாகிய சுவாலைகள்

கணந்தோறும் உண்டாய் நாசமடைவதாயினும், அந்த இந்த தீபச்சுவாலை எனப் பிரதீதி காணப்படுவதால், அந்நீதி கொண்டு ஜாத்தீக சுபாவத்தால் நித்தியமே ஆதலால் அவ்விஞ்ஞானத்தன்மையே ஆகும். இக்ஷணிக விஞ்ஞான மாகிய ஓர் பாகமே பஞ்சஸ்கந்தமெனும் பரிணாமத்தை அடைந்து, அப்படியே அதன் வழியாய் தோற்றமுடைய ஸ்தூல பிரபஞ்சமாகிப் பரிணமித்து நிற்கும். ஆதலால் பிரபஞ்ச காரியமாகும். க்ஷணிக விஞ்ஞானத்திலுள்ள உற்பத்தி நாசங்கள் கணபேதத்தால் சித்தித்து இருப்பதுபோல இப் பிரபஞ்சம் க்ஷணந்தோறும் கிரமமாய் உற்பத்தி ஸ்திதி நாசங்களைப் பொருந்தி நிற்கும். இவ்விஞ்ஞானமே ஆன்மா எனப்படும். விஞ்ஞானமாகிய புத்தியே எவர்களுக்கு ஆன்மாவோ அவர்கள் பௌத்தர்கள் எனப்படுவார்கள்.''

''அங்ஙனம் பிரபஞ்சம் க்ஷண பங்குரமாகிய அநித்திய வஸ்து ஆதலால், அதனை அபிமானித்தல் பந்தம் எனவும், அதனை நீங்கி சரம விஞ்ஞானஸ் புராணமாகிய திதியின் பிராப்தியே மோக்ஷம் எனவும், பஞ்சஸ கந்தங்களை விடையங்களை முன்னிலைக் கொள்ள க்ஷணிக விஞ்ஞான மாகிய புத்தி அதன் வழியே பிடகநீதி விரோதமாய், விடையங்களைப் புசித்தல் பாவம் எனவும், நீதியாய்ப் புசித்தல் புண்ணியம் எனவும், இவர்கள் கூறுவதில் கணந்தோறும் பங்குரப்படுகின்றன விஞ்ஞான ஸ்வோத்தர மாய் இல்லாத சிரம விஞ்ஞான மாத்திர ஸ்திதியை அடைவதே முடிந்த நிலைமை. அதன் பிராப்தியின் பொருட்டு இப் புத்தியின் சுபாவமான உற்பத்தி ஸ்திதி நாசங்களை எதிரிடாமல் நிற்கின், அவைகள் அவ்விடத்து பரிணாம வல்லபத்தை நீங்கிவிடும். அஃது நீங்க அக்காரணமாகிய க்ஷணிக விஞ்ஞானம் விஞ்ஞான சத்தையில் அடங்கி நசித்திடும். அங்ஙனமே அதன் பரிணாமம் ஆகிய குணகுணியான பிரபஞ்ச ரூபகாரியமும் காரண

குணம் நசித்தது போல் நசித்து விடும். அப்படியே பஞ்சஸ்கந்தமும் நசிந்து விடும். இங்ஙனம் காரணகாரிய மார்கிய விஞ்ஞான பரிணாமம் நீங்கின், இன்மையை எதிரிடாமலும், இனியோர் உதிப்பு விஞ்ஞான ரூபமாக வருமாறு நேரிடாமலும், உள்ள ஸ்திதி அநுபவமாயிருப்பதால் அவ்வாநுபூதியே ஜாத்தீக சுபாவமான சரமவிஞ்ஞான அநுபூதியாகும். அவ்வநுபூதி நீங்காமல் இருப்பேத மோக்ஷம் எனப்படும்''

''இந் நிலையை இவ்வாறே அடைந்து பார்க்கின் அவ்விதம் பிரகாசிக்கின்ற விருத்திக்கு அந்நியமாய் ஒரு திருஷ்டாவாகிய சித்தை நிரூபித்து நிற்கும். மேலும் தனக்கு அந்நியமாகியும் தனக்கு ஆதாரமாக ஒரு விஞ்ஞான மிலதாகியும் உள்ள சரம விஞ்ஞானத்தின் ஸ்திதியே புருஷார்த்தமாயின்; அவ்வாறே அவ்வநுபூதியுண்டாகுங்காற் கூறிய லக்ஷணப் பிரகாரம் நிஷேத அஞ்ஞானப் பிரதியோகிகமாகவே சித்திக்கும். அவ்வித சம்பிரதியோகிக ஞானலக்ஷணம் பொருந்திய அவ்விஞ்ஞானம் உள்ளபடி அநுபவத்துக்குவரக் காட்சிப்பட்டு பிரபஞ்சம் போல அநித்திய தன்மையைப் பொருந்தித் தனக்கொரு காரணத்தை அபேக்ஷித்து நிற்கும். அங்ஙனமாயின், விகார நிர்வாகத் தன்மைகளை எதிரிடாத எக்காலத்தும் ஒன்றுபோல் பிரகாசிக்கின்ற சுயஸ்சித்தைத் தவிர அவ்விடத்து வேறு காரணமில்லாததால், அச்சித்தையே சாதகர்களுக்கு வெகுவாய்ப் பிராப்தியாகும் பொருட்டு, சமர விஞ்ஞானம் எனும் ஓர் பதவியை நிரூபித்து, அதனையே பரகதியாகக் கூறினார்கள்.''

''மேலும் இச் சரம விஞ்ஞானம் என்றது இக்ஷணிக விஞ்ஞானத்தின் ஆரம்பமுதல் அவசானம் வரையுள்ள பின்ன பின்னமாகியஸ் பூர்த்திகளில் ஒன்றா? அல்லது அவற்றிற்கு

அன்னியமாகிய அவசான சமையத்தில் பவிக்கின்றதா? அல்லது, முன்னமே இருக்கின்றதா? எனப்பார்க்கின், இக்ஷணிக விஞ்ஞானத்தின் பரம்பரைக்குள் ஒன்றாகி இருக்குமாகில், மற்றவை தனது காரணமானதால் அக் காரணகுணத்தை இஃதும் பொருந்தி அநித்தியமாய் நிலைபெறாமல் நீங்கிவிடும். அங்ஙனம் நீங்கில் தனக்கு காரணமாயுள்ள ஓர் விஞ்ஞானம் நசிக்கத்தான் உற்பவித்ததுபோல் அக்குணம் பொருந்திய தனது நாசம் நேரிட, மற்றொரு விஞ்ஞானமும் அவசியம் உதிக்கவே செய்யும் மேலும் க்ஷணிக விஞ்ஞான பரம்பரைகளுக்கு வேறாகி அவசானத்தில் பவிக்கின்றதாயின் அதற்குக் காரணம் வேண்டும். இக்ஷணிக விஞ்ஞான பரம்பரையே காரணமாயின் முற்கூறிய குற்றம் நேரிடும். மற்ற எக்காரணம் ஒப்பினும், அப்படியே அந்நியமாயும் எக்காலத்திலும் உள்ளதாகியும் கூறில் சுயஸ்சித்தாகிய அத்துவித சொரூபத்திற்கு வேறாயின்றி அனாத்மத்தன்மை பொருந்தி நீங்கி விடும். ஒரு விஞ்ஞானம் உற்பத்தியாகாமல் இருப்பதற்கும் யாதொரு சுருதி யுக்தி அநுபவம் எனும் ஆதாரம் காணப்படாததினால், அஃது அம்மதத்தில் நிரூபிக்கப்படாமலும் இருப்பதினால், அவர்கள் கருத்திலும் நிர்விசேஷ அத்துவித சுபாவமே உளதாம்.''

''ஆனால், முற்கூறிய சரம விஞ்ஞானம் தனக்குப் பாவங்களாகிய விஞ்ஞானங்கள் போல் அன்று. விசேஷ முடையதாகும். அவ் விசேஷமாவது, அதன் சொரூப லக்ஷணத்தை எம்மார்க்கத்தாலும் கண்டிக்ககூடாத தன்மையேயாம் எனில், அவ்விசேஷம் அவ்விஞ்ஞானத்திற்கு அந்நியமா? அல்லது தானே தனக்கு விசேஷமா? தனக்கு அந்நியமாயின் தான் சித்தித்து விசேஷம் சித்திக்க வேண்டுவதால் அந்நியோந்யாசிரிய தோஷமும், தானே

தனக்கு விசேஷமாயின் சுவாத்மாசிரிய தோஷமும், மற்றொரு விசேஷத்தை அபேக்ஷிக்கில் சக்கிர காபத்தி அநவஸ்தாப் பிரசங்க முதலிய பெருங்குற்றமும் முறையே நேரிடும்."

"மேலும் க்ஷணிக விஞ்ஞானத்தின பரம்பரைகளில் ஆதிமங்களமான சில விஞ்ஞானங்கள் துறவு முதலிய சாதனங்களைச் சாதித்ததுகளாகி, அதன் பயனாகிய புருஷார்த்தத்தைச் சரம விஞ்ஞானம் அடைவதாயின், ஒருவன் செய்த நன்மை தீமைகளை மற்றொருவன் அடைவதுபோல் அநீதியாகும். மேலும் பஞ்சஸ்கந்தத்தின் வழியாக விஞ்ஞானம் என்னும் ஆன்மாவினால் செய்யப் பட்ட அம் மதசம்பந்தமான நன்மை தீமைகள் அவற்றின் பலத்தை அவனுக்கு ஊட்டுவித்துத் தேக நீங்கியதின்பின், அவ்வான்மாவிற்கு ஜனித்தல் இல்லாததால் புசித்த சேஷமான அக்கருமங்களை தன் பலமாகிய ஜன்மத்தைக் கொடுக்க வல்லபம் உடையதாகி மற்றோர் ஆன்மாவைச்சம்பந்தித்து ஜநிப்பிக்கும் என்பது அம்மதத்தில் கூறப்பட்டிருப்பதால், அஃது முற்கூறிய பிரகாரம் பெருங்குற்றமாகப் பவிக்கும்."

"ஆதலால், அவ்விடத்து அத் தீபச்சுவாலை போலென்ற ஜாத்தீக சுபாவமான நியாயங் கொண்டு போதித்திருப்பதில், விஞ்ஞானமாகிய ஆன்மாவின் இடத்தில் அநித்யத்துவம் க்ஷணிக விஞ்ஞானமென்ற சங்கேதத்தால் அச் சாதகர் களுக்குத் தோற்றாமல், அந்நியாயத்தால் நித்யத்துவம் தோற்றுமாறு அங்ஙனம் சந்தேகித்து இருப்பினும், அம்மதத்தின் கருத்து அதனாலேயே ஆன்மா நித்யம் என்பதை ஸ்தாபித்ததாகும். காரிய வஸ்துவாகிய பிரபஞ்சம் அநித்யம் என்பதை ஸ்தாபிக்க வேண்டிக் காரணமாகிய க்ஷணிக விஞ்ஞானத்தை அநித்யமாகக் கூறப்பட்டிருந் திடினும், அப் பரம்பரைகளின் ஜாத்தீக சுபாவமே

அவ்விஞ்ஞானமாகிய ஆன்மாவுக்கு நித்யத்துவ ஸ்தாபக மாகக் காணப்படுவதால், ஆன்மா ஞானரூபம் எனவும், நித்தியன் எனவும் சாதகர்கள் அறியும் பொருட்டு, அதில் லகுவாகத் திருசியமாகத் தோற்றி விஞ்ஞானம் ஆன்மா வெனவும், பூர்வங்களான விஞ்ஞானம் நீங்கினும் உத்தரமாக ஓர் விஞ்ஞானம் நீங்கினும் உத்தமராக ஓர் விஞ்ஞானம் உதியாவிடினும், சரமம் எனும் ஓர் விஞ்ஞானத்தை நிலைபெற நிரூபித்தது கொண்டு, முற்கூறிய குற்றங்கள் அப் புருஷார்த்தத்தைச் சாராமல் இருக்க வேண்டி, அத்துவிதீய சின்மாத்திர சொரூபமே அவர்கள் கருத்திலும் உளதாகும் எனத் தெரிவித்ததே அன்றி, மற்றின்றென்றருள, மாணாக்கன் அங்ஙனமே இம்மதத்திற்கும் அத்துவிதமே உட்கருத்து எனத் தெளிந்தான்.''

## 4. தமிழ் பிரம்ம கீதைக்கு உரை

சுந்தர சுவாமிகள், பிரம்மகீதைக்கு தத்துவராயர் செய்திருக்கும் தமிழ்ச்செய்யுள் மொழிபெயர்ப்புக்கு ஒருவிசேஷ உரை செய்தார் என்று கூறியிருக்கிறோம். மாதிரிக்காக, ஒரு பாட்டுக்கு *(93)* சுவாமிகள் சொன்ன விளக்க உரையைக் கீழே கொடுத்திருக்கிறோம். ''பிரமான்ம ஏகத்வ லக்ஷணமுடைய வாக்கியப் பொருள் அடிக்கடி உபநியாசஞ் செய்யப்படினும், இவ்வாக்கியப் பொருளையே திரும்பவும், அன்னைபோல் இதத்தைச் செய்கின்றதாகிய குற்றமில்லாத சாந்தோக்கியச் சுருதியானது, சமுசார லக்ஷணமான மகத்தான ஆயாசத்தை அடைந்து துன்புறுகின்ற மானிடர்களுக்கு, அநேக விதங்களால் வரும் சங்கைகளை நிராகரித்து, அடிக்கடி உபதேசிக்கின்றது. அஃதெங்ஙனம் எனில், சுழுத்தி உத்திராந்தி முதலிய அவஸ்தைகளில் எந்த ரூபத்தை ஜீவன் அடைகின்றானோ, அச் சொரூபமான பிரமம்

நீ ஆகின்றாய் என்று பிதாவினால் உபதேசிக்கப்பட்ட சுவேதகேது சங்கிக்கின்றான். சுழுத்தியிற் சத்தையடைந்தவர்களான பிரஜைகள், அந்த பிரமான்மத்தன்மையை ஏன் அறியவில்லை என, வண்டுகளால் மதுவாகச் சேர்க்கப்பட்ட நானாவிருக்ஷபுஷ்பரஸ ஸமுதாயம்போல பிரித்திடக் கூடாமையாற், சுழுத்தி முதலியவற்றில் அடையப்பட்டிருந்திடினும் பிரமம் அறியப்படவில்லையென்று அச்சங்கையை நிராகரித்து, முற்கூறிய பொருளையே திரும்பவும் உபதேசித்திடச் சுழுத்தி முதலியவற்றிற் காரணங்கள் இல்லாமையினால் அறியப்படவில்லை. எழுந்தபின் பிரம்மத்தினின்றும் நான் எழுந்திருந்தேன் என்று ஏன் அறிகின்றாரில்லை யென்று சங்கிக்க மேகங்களாற் சமுத்திரத்தினின்று முண்டு பெய்ய வருவனவாயும், திரும்பவும் சமுத்திரத்தை அடைவனவாயும் உள்ள நதிகள், சுவையின் வேறுபட்டாற் சமுத்திரத்தினின்றும் வந்தன என்றும், சமுத்திரத்தின் ஜலம் என்றும் அறியப் படாதன போல், பிரம்மத்தினின்றும் எழுந்திருந்த ஸம்ஸாரிகளுக்குப் பிரம்மவிலக்ஷணத் தன்மை இருப்பதனால், நாம் பிரம ரூபமாக இருந்து எழுந்திருந்தோம் என்று ஞானம் வரவில்லை யென்றதனைப் பரிகரித்து, முற்கூறிய வாக்கியமே உபதேசிக்கப்பட்டது. சுழுத்தியிற் கரணங்கள் இல்லாதிருக்குமளவில் சமுத்திரத்தில் அலை முதலியன போற் ஜீவன் அழிவான் என்று சங்கிக்க, மரமானது பரசு முதலியவைகளாற் சேதிக்கப் படினும் இரத்தம் பெருகுவதுபற்றி ஜீவனோடு கூடியதெனக் கொள்வதுபோற் சுழுத்தியடைந்த தேகத்திலும் ரத்தம் காண்பதினாற் ஜீவன் அழியவில்லை யென்றதைப் பரிகரித்து முற்கூறிய பொருளே ஸ்தாபிக்கப்பட நுட்பமாய பிரம்மத்தினின்றும் ஸ்தூலஜகத்தின் உற்பத்தி எப்படிக் கூடுமென, சூக்குமமான ஆலம்வித்தினின்றும் அம் மரத்தின் உற்பத்திபோற் கூடும் என்று அதனை நிராகரித்து உத்தேசிக்க, ஜகத்தின் மூலகாரணமான பிரமம் எதனாற் காணப்படவில்லையென,

நீரிலிருக்கும் உப்பின் கனம், பார்வை பரிசம் இவைகளால் அறியப்படாவிடினும், ரசனையால் உப்பின் இருக்கை நிச்சயப்படுவதுபோற், கண் முதலியவற்றிற்கு திரிசயப்படா விடினும் காரியலிங்கத்தினால் இருக்கின்றதென்று கூற, பிரம சாக்ஷாத்காரத்தில் ஏது உபாயம் என்று சங்கித்து, காந்தார தேசத்தினின்றும் காட்டில் திருடர்களால் கண்ணைக் கட்டிவிடப்பட்ட புருஷனுக்கு நேத்திர பந்தத்தை நீக்கிக் காந்தார தேசத்தை அடையச் செய்யும் உபதேசம்போல, ஆசாரியரால் செய்யப்பட்ட உபதேசத்தால் பிரம்ம சாக்ஷாத்காரம் அவித்யா நிவர்த்தி இரண்டும் உண்டாகும் என்று கூறப்பட்டது. அந்த வித்துவான் எவ்விதமாய் பிரமத்தை அடைகின்றான் எனில், மன முதலிய லயித்திடுங் கால் ஞான தீபத்தாற் பிரகாசிக்கப்பட்ட பிரமத்தையே அடைகின்றான் அன்றி, அர்ச்சிராதிமார்க்கங்களை அபேக்ஷிக்க வில்லை. அந்த வித்துவான், வேறொரு தேகத்தையும் கிரகிக்கின்றானில்லை. இறப்பவனும் மோக்ஷமடைபவனும் பிரம்மத்தை அடைபவர்கள் என்னில் வித்துவானும், வித்துவானைப் போல் ஏன் ஜனிக்கமாட்டான் என்று சங்கிக்க, திருடினவன் திருடாதவன் இருவர்களும் மழுவேந்தி சத்தியம் செய்யுங்கால், இருவர் கையிலும் மழுவின் சம்பந்தம் சமானமாய் இருந்திடினும், திருடாதவன் தகிக்கப்படான், திருடினவன் தகிக்கப் படுகின்றான். இவ்வாறு வித்துவானுக்கும், அவித்துவானுக்கும் அந்நிய காலம் சமானமாக இருந்திடினும், சத்தியப்பிரமத்தில் அபிப்பிராயமுடையவன் திரும்பவும் தேகத்தை அடையமாட்டான்; பொய்யான தேகம் முதலியவற்றில் அகம் புத்தியுடையவன் திரும்பவும் சரீரத்தை அடை கின்றான் என இந்தப் பரிகாரம், ஒன்பது பரியாயங்களால் அச்சங்கையை நிராகரித்து, 'அது நீ ஆகின்றாய்' என்ற வாக்கியத்தால் முற்கூறிய பிரம்மான்ம ஐக்கியமானது சுருதியினால் நிலைசெய்யப் பட்டது எனலாம்.''

# அநுபந்தம் -1

## சூத சம்ஹிதை

சமயத்துறையிலும் ஆன்மீகத்துறையிலும் தோன்றிய பெரியோர்களில் ஒவ்வொருவரும், தங்கள் தங்கள் இஷ்ட தேவதையை வழிபடுவதுபோல், ஒரு குறிப்பிட்ட நூலில் பற்று வைத்து, அதில் விசேஷப் பயிற்சி பெற்று, அதையே பொருளாகக் கொண்டு சொற்பொழிவுகளும் உபதேசமும் செய்வதுண்டு. சிலர் ராமாயணத்தையோ, மகாபாரதத்தையோ, பகவத்கீதையையோ, திருக்குறளையோ இவ்வாறு முற்றிலும் சுற்றுப் பயன்படுத்துவதுண்டு. கோடக நல்லூர் சுந்தர சுவாமிகள் வடமொழியில் மிகுந்த பாண்டித்யம் அடைந்தவர்; அத்துடன் அவர் ஆர்வம் மிகுந்த சிவபக்தர். பதினெண் மகா புராணங்களில் பத்து சிவ புராணங்கள். இவற்றில் மிகப் பெரியதாகிய ஸ்காந்தம் லட்சம் கிரந்தங்கள் உடையது. இதிலுள்ள ஆறு சம்ஹிதைகளில் சூரசம்ஹிதையும் ஒன்று. இது நைமியசாரணத்தில் சூதமுனிவரால் ரிஷிகளுக்கு எடுத்துச் சொல்லப்பட்டது. ஸ்காந்திதந்திலுள்ள மற்ற ஐந்து சம்ஹிதைகளாவன: சனத்குமார சம்ஹிதை, பிரம சம்ஹிதை, விஷ்ணு சம்ஹிதை, சங்கர சம்ஹிதை, சூரசம்ஹிதை.

சூதசம்ஹிதை ஆறாயிரம் கிரந்தங்களுடையது. அதற்கு வித்யாரண்யரும் மாத்வரும் வடமொழியில் உரைகள் எழுதியிருக்கிறார்கள். அதில் நான்கு காண்டங்கள் இருக்கின்றன. சிவ மகாத்மிய காண்டம், ஞானயோக

காண்டம், முக்தி காண்டம், யக்ஞவைபவ காண்டம் ஆகியவை இந்நான்கும். யக்ஞவைபவ காண்டத்தின் இறுதிப் பகுதிதான் பிரம்மகீதை என்பது. இதில் 12 அத்தியாயங்கள் இருக்கின்றன. இந்தப் பகுதியைத் தத்துவராயர் 541 பாடல்களில் தமிழில் மொழிபெயர்த்திருக்கிறார். பிரம்மகீதையில் சாந்தோக்யம், பிருகதாரண்யம் உள்பட ஏழு உபநிடதங்களின் சுருக்கம் காணப்பெறுகிறது.

சூதசம்ஹிதையின் தமிழாக்கம், வல்லூர்தேவராச பிள்ளையால் இயற்றப்பெற்றதாக 1756-ம் வருடம் பிரசுரிக்கப்பெற்றது. இதில் நான்கு காண்டங்களுக்கும் சேர்ந்து 3003 பாடல்கள் உள்ளன. ஆனால் இது அவருடைய தமிழ் ஆசிரியரான மகாவித்துவான் மீனாட்சிசுந்தரம் பிள்ளைால் ஆக்கப்பெற்று தேவராசபிள்ளையின் பெயரால் வெளியிடப் பெற்றது என்று தெரிகிறது. சுந்தர சுவாமிகள், மீனாட்சி சுந்தரம் பிள்ளையைச் சூதசம்ஹிதையைத் தமிழில் அருமையாகப் பாடியதற்காகப் பாராட்டினார் என்று டாக்டர் உ.வே.சாமிநாதய்யர் கூறியிருக்கிறார். இந்த மொழிபெயர்ப்பிலுள்ள பல தமிழ்ப் பாடல்க்ளை மகாவைத்தியநாத பாகவ்தரால் பாடச்சொல்லி சுந்தர சுவாமிகள் கேட்டு ஆனந்திப்பதும், தமது சொற்பொழிவு களின் சமயம் பாகவதர் இருந்தால் அவரைப் பாடச் சொல்வதும் வழக்கம் என்று தெரிகிறது.

தமிழில், கச்சியப்பசிவாசாரியாரால் பாடப்பெற்று இப்போதுள்ள கந்தபுராணத்தில் சூதசம்ஹிதை இல்லை. தமிழ் கந்தபுராணம், வடமொழி ஸ்காந்தத்தின் சங்கர சம்ஹிதையின், முதல் காண்டமாகிய சிவரகசிய கண்டத்தில் உள்ள ஏழு காண்டங்களில், முதல் ஆறு காண்டங்களின் தமிழாக்கம். ஏழாவது உபதேச காண்டம் கோனேரியப்ப முதலியாரால் தமிழில் செய்யப்பெற்றது.

சுந்தர சுவாமிகள் சூதசம்ஹிதையை விசேஷமாக தமது பிரவசனத்திற்கும் சொற்பொழிவுகளுக்கும் எடுத்துக் கொண்டதின் காரணம் அவர்களுடைய மாசற்ற சிவபக்தியே. அதிலுள்ள பிரம்மகீதையும் மற்றொரு காரணமாயிருக்கலாம். வேதாந்த தத்துவத்தைப்பற்றிச் செய்யுளில் தமிழில் நூல்கள் செய்தவர்களில், தத்துவராயர் மிகச் சிறந்தவர், பிரம்ம கீதையின் தமிழாக்கம் சுந்தர சுவாமிகளைக் கவர்ந்ததில் ஆச்சரியம் ஒன்றும் இல்லை.



அரிமளம் சுந்தர சுவாமிகள் திருக்கோயில் மூலவர்

# அனுபந்தம்-2

## சுந்தர சுவாமிகளின் வாழ்க்கைச் சுருக்கம் (செய்யுள்)

1. இலங்குமா யிரத்தோ டேழதா மாண்டுக்
கிசைந்திடுங் கரவரு டத்தில்
நலங்கொள் கார்த்திகை நன்மதியினி லநுட
நாட்சனி வாரத்தில் விடையிற்
கலங்கலில் பொருனைக் கோடக நல்லூர்க்
காமர் பூசுரர் செய்மா தவத்தாற்
பொலங்கொள்ளும் பரம-சுந்தர குருவாய்ப்
புவிமிசை யவதரித் தனனே.

2. அவத ரித்தறி வோங்கிட வளர்ந் துறவோ
ராற்சிகை பூணுநூ லணிந்து
பவமற மறை யாகம முணர்ந் தவற்றுட்
னுவமையொப் பிறந்த சானகி மாதை
யுளங்கொள நன்மணம் புரிந்து
சிவபரம் பொருளைச் சிந்தைவாய் மெய்யுஞ்
செறிதரப் பூசனை செயவே.

3. செய்தவப் பலத்தாற் றேசிகன் விசுவே
சுரரிட ஞான தீக்கையும் பெற்
றையமற் றறிவா லிந்த்ர சாலம கிலமென்
றுணர்ந் துநற் றுறவாய்
மெய்யறி வனந்தா னந்தமே விடுநாள்
விசுவேசர் பூரண மடையக்

கையிலா மலகக் கனியெனச் சோம
சுந்தரன் கருணைநோக் கடைந்தே.

4. தேசுறு சகச நிட்டையிற் பொருந்தித்
தீர்த்தங்கள் காசிபல் தலமும்
பூசுரர் குழுவோ டளவில்யாத் திரையிற்
போக்கினன் சிற்சில பொழுதை
வீசுறு சிறுகால் நெல்லையம் பதியில்
விளங்குமா ருத்திர மதனோ
டாசறு தீப விலக்கமு மியற்றி
யரன்பணி விடையினுள் கழித்தான்.

5. ஆனிலைந் தாடுமை நதிக்கடவு
ளாலயப் பதிட்டையு மாங்கே
ஞானிகள் வியக்கச் சாத்திர சாலை
நலமுட னமைத்தது மன்றி
நானிலத் துள்ள பதிகளிற் சிலதை
நயம்பெறப் புதுக்கியு மிடையே
மோனி கடுதிக்கச் சாத்திர நான்கை
மொழிந்தனன் சிலதினந் திகழ்ந்தே.

6. [illegible] விரத்தெதும் பத்திரா லாண்டிற்
[illegible]வெகு தானிய வருடப்
புகழுறும் பசியாறாம் [illegible] மதிநாள்
புகல்கிருட்டின பக்கத் [illegible]
நிகழ்மகம் [illegible] [illegible]த்தாய்
சேர்ந்துயர் விசையரி மனத்தில்
துகளில்சீ ரடியார் சூழ்ந்தி[illegible] திருப்பச்
சுந்தரன் கலந்தனன் பரத்தே.

சுவாமிகளின் பிரதம சீடரான [illegible]சுவாமிகள் இயற்றியது. இவற்றிலிருந்துதான் சுந்தர சுவாமிகளின் பிறந்த தேதி, மனைவியின் பெயர், மறைந்த தேதி முதலிய சில விவரங்கள் நமக்குக் கிடைத்திருக்கின்றன.

# அனுபந்தம் -3

## சுந்தர சுவாமிகள் ஜாதகம்

*கொல்லம் 1007ம் ஆண்டு, கரவருடம் கார்த்திகை மாதம் 20-ம் தேதி (3.12.1831) சனிக்கிழமை, அமாவாசையும் அனுஷ நட்சத்திரமும் கூடிய சுபதினத்தில், உதயாதி நாளிகை 26 வினாடி 15க்கு, விருஷ்ப லக்கினத்தில் சுப ஜனனம். நவாம்ச லக்கினம் கும்பம்; ஜன்ம நட்சத்திரம் அனுஷம்.*

| | | | |
|---|---|---|---|
| | | ல | |
| | ராசி | | ராகு |
| குரு கேது | | | சனி |
| புதன் | சூரி சந்தி செவ் | சுக் | |

| | | | |
|---|---|---|---|
| | | | புதன் செவ் |
| ல ராகு | நவாம்சம் | | |
| | | | வியா கேது |
| சூரி | சுக் | சனி | சந் |

### சம்பிரதாயப்படி

### சுந்தர சுவாமிகள் குருபரம்பரை

*தட்சிணாமூர்த்தி*
*[நாரணர்]*
|
*பிரமன்*
|
*வசிஷ்டர்*
|
*சக்தி*
|




1904-ல் பதிப்பிக்கப்பெற்ற ஸ்வாநுபூதி ரசாயனத்தில் இந்தப் பரம்பரை கொடுக்கப்பட்டிருக்கிறது. விசுவேசுவர சாஸ்திரிகள் சிந்தியானவுடன், அவருடைய குரு புத்திரரான சோமசுந்திர சாஸ்திரிகள் சுந்தர சுவாமிகளுக்குக் குரு வாயிருந்து அருள் செய்தார் என்று தெரிகிறது. மகான்களின் வாழ்க்கையைப் பற்றி இவ்வாறு குருபரம்பரை கூறுவது மரபு.

# அநுபந்தம்-4

## நெல்லையில் உள்ள சுந்தரசுவாமிகள் பஜனை மடம்

**கோ**டகநல்லூர் சுந்தர சுவாமிகள் திருநெல்வேலிக்கு வரும்போது, சில சமயம் சங்கரமடத்திலும், வேறு சமயங்களில் குறுக்குத்துறை கோவிலிலும் பெரும்பாலும் பஜனை மடத்திலும் தங்குவது வழக்கம் என்று கூறியிருக்கிறோம். பஜனை மடம் என்பது, நூலின் ஒரு அடிக்குறிப்பில் குறிப்பிடப்பட்டிருக்கிறது போல், சுவாமிகளின் பிரதமசீடர்களில் ஒருவரான கொ.சிதம்பரம் பிள்ளைக்குச் சொந்தமான, தெற்கு ரத வீதியில் வடக்கு வரிசையிலுள்ள பங்களா. இவர் கார் க்காத்த வேளாள குலத்தைச் சேர்ந்த நிலக்கிழார். இவருடைய வீடு சேர்மாதேவி ரோடில் இருக்கிறது. அதில் இன்றும் அவருடைய தௌஹித்திரரான சேரகுளம் பண்ணை திரு.அ. பழனியப்ப பிள்ளை வசித்து வருகிறார்.

திருநெல்வேலி டவுண் தெற்குரத வீதியிலுள்ள கொ.சிதம்பரம் பிள்ளையின் பங்களாவைத்தான், சுந்தர சுவாமிகள் காலத்தில் பஜனை மடம் என்று கூறுவார்கள். கொ.சிதம்பரம் பிள்ளையும், பஜனை சிதம்பரம் பிள்ளை என்றே அவர் வாழ்நாளில் அழைக்கப்பட்டார். இந்த பஜனை மடத்தில்தான், சுந்தர சுவாமிகள் கொண்டுவந்த பெரிய நடராஜர் படம் (தஞ்சை ஓவியர் ஒருவரிடமிருந்து அரிமளம் சிவராமன் செட்டியார் வாங்கி சுவாமிகளிடம் கொடுத்தது) வைத்து ஆராதனை செய்யப்பெற்றது. இன்றும் அந்தப் படம் அங்கே காணப்பெறுகிறது. சுந்தரசுவாமிகள் அடிக்கடி இங்கே தங்கியதால், அவருடைய சீடர்களும் அங்கேயே தங்கினார்கள். தினந்தோறும் பூஜை பஜனை முதலியன

நடைபெறும். சுவாமிகள் தமது சீடர்களுக்குத் தத்துவ விஷயங்களைப் பற்றி உபதேசித்ததும் இங்கேதான்.

சுந்தர சுவாமிகள் ஜோதியில் கலந்த பிறகு, பஜனை கொ.சிதம்பரம் பிள்ளை இந்த பங்களாவில் சில மாறுதல்கள் செய்து, அதை ஒரு பஜனை மடமாகவே ஆக்கினார். அதன் பராமரிப்புக்குச் சில சொத்துக்களையும் விட்டிருப்பதாகத் தெரிகிறது. மடத்தின் முகப்புச்சுவரில் பதிக்கப் பெற்ற ஒரு கல்லில் அடியிற்கண்ட வாசகம் காணப்படுகிறது:

உ

சிவமயம்

**ஸ்ரீமத் சுந்தர நடராஜ பஜனை சபை**

இஃது என்னால் எனது குருமூர்த்தி கோடகநல்லூர் சுந்தர சுவாமிகளின் ஆக்ஞையின்படி நிர்மாணம் செய்யப்பெற்று, 1065ஆம் ஆண்டு விகிரதி வருடம் வைகாசி மாதம் 25ம் தேதி ஸ்ரீமத் சுந்தர நடராஜ மூர்த்தி பிரதிஷ்டை செய்யப்பெற்றது.

*பஜனை கொ.சிதம்பரம் பிள்ளை*

*ஷெ யார் குமாரர் திருநாவுக்கரசுபிள்ளை*

*சதாசேவை*

இதிலிருந்து, இந்தப் பஜனை மடம், ஸ்ரீ மத் சுந்தர நடராஜ பஜனை சபை என்ற பெயருடன், கோடகநல்லூர் சுந்தர சுவாமிகள் ஞாபகார்த்தமாக, அவர் மறைந்து 12 வருடங்களுக்குப்பின், 1809ல் நிர்மாணம் செய்யப்பெற்ற தென்று புலப்படுகிறது. இன்றும் இதில் தினசரி பூஜை நடந்து வருகிறது. சுந்தர சுவாமிகள், அவருடைய மனைவியார் சானகி அம்மாள் ஆகியோரின் திருநட்சத்திரங்களும் சிறப்பாகக் கொண்டாடப் பெறுகின்றன. ஆனால் முன் போல் பஜனைகள் நடப்பதாகத் தெரியவில்லை.

இந்தப் பஜனை மடத்தையும், அதிலுள்ள சில படங்களையும் புகைப்படம் எடுக்க அநுமதித்த, அதன் நிர்வாகி திரு.அ.பழனியப்ப பிள்ளைக்கு நன்றி செலுத்தக் கடமைப் பட்டிருக்கிறோம்.




# அநுபந்தம்-5

## இந்நூலை எழுதுவதற்குத் துணைபுரிந்த நூல்கள்

1. ஸ்ரீசுந்தரசுவாமிகளின் திவ்விய சரித்திரம் - சுவாமிகளின் சீடர்கள்- தஞ்சாவூரில் வெளியிட்ட சிறுநூல் 1914
2. சுந்தர சுவாமிகள் சரித்திரம்- B.V. காமேசுவரய்யர் (1925)
3. சுந்தர சுவாமிகள் - G.K. சுப்பய்யர் (1940)
4. சுந்தர சுவாமிகள் - T.K.ராமபத்திர சர்மா (லோகோபகாரி பத்திரிகைக் கட்டுரைகள்) (1938-39)
5. சுந்தர சுவாமிகள் சரித்திரம் - சுவாமி ராமநாத் பாரதி (1972)
6. ஸ்வாநுபூதி ரஸாயனம் - சுந்தர சுவாமிகள்
7. ஸ்வாநுபவ ரஸமஞ்சரி - சுந்தர சுவாமிகள்
8. நிஜானந்த விலாஸம் - சுந்தர சுவாமிகள்
9. பிரம்ம கீதை உரை - சுந்தர சுவாமிகள் (தத்துவராயர் மொழி பெயர்ப்புக்கு)
10. அத்வைத போத தீபிகை (மொழி பெயர்ப்பு)
11. மனோன்மணீயம் - பி.சுந்தரம் பிள்ளை

12. என் சரிதம் - டாக்டர் உ.வே.சாமிநாதையர்
13. மகாவித்துவான் மீனாட்சிசுந்தரம் பிள்ளை அவர்கள் சரித்திரம் - டாக்டர் உ.வே.சாமிநாதையர்
14. சூதசங்கிதை (தமிழ்) - வல்லூர் தேவராசபிள்ளை (1856)
15. கந்தபுர்ராணம் - ஆறுமுக நாவலர் பதிப்பு
16. திருவருட்பா - வள்ளலார் ராமலிங்க சுவாமிகள் காரணப்பட்டு , ச.மு. கந்தசாமிப்பிள்ளையால் பார்வையிடப்பட்டு, தி.நா.முத்தையா செட்டியார் பதிப்பித்தது (1924)
17. Fifty Pilgrimage of a Convert- A.S. அப்பாசாமி பிள்ளை பாளையங்கோட்டை (1924)



திருநெல்வேலியில் உள்ள சுந்தர சுவாமிகள் பஜனை மடம்

